உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 6 | ரௌத்திரி௵ மார்கழிமீ கஉ | 1920௵ டிசம்பர்மீ 15உ | பகுதி 6

## கடவுள் வணக்கம்.

மின்போலு மிடையொடியு மொடியுமென மொழிதல்போன்
மென்சிலம் பொலிக ளார்ப்ப
வீங்கிப் புடைததுவிழு சுமையன்ன கொங்கைமட
மின்னார்கள் பின்னு லலாய்
என்போ லலைந்தவர்கள் கற்றோர்கள் கல்லார்க
ளிருவர்களி லொருவ ருண்டோ
என்செய்கே னம்மம்ம வென்பாவ மென்கொடுமை
யேதென் றெடுத்து மொழிவேன்
அன்பால் வியந்துருகி யடியற்ற மரமென்ன
வடியிலே வீழ்ந்து வீழ்ந்தெழும்
அடிகளே யுமதடிமை யாஙகளெனு நால்வருக்
கறமாதி பொரு ளுரைப்பத்
தெள்பாலின் முகமாகி வடவா லிருககின்ற
செல்வமே சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயா னநதமே.

---

திடமுறவே நின்னருளைச் சேர்த்தென்னைக் காத்தாளக்
கடனுனககென் றெண்ணிநின்னைக் கைகுவித்தோ னலனே
வடைவுகெட்ட பாழ்மாயை யாழியிலே யின்னமல்லற்
படமுடியா தென்னுவிப் பற்றே பராபரமே.

ஆராமை கண்டிங் கருட்குருவாய் நீயொருகால்
வாராயோ வந்து வருத்தமெல்லாம் தீராயோ
பூராய மாகவருட் பூரணத்தி லண்டமுதற்
பாராதி வைத்த பதியே பராபரமே.

# ஆனந்தபோதினி

இரௌத்திரி ஹூ மார்கழிமீ கவ்

## திரி மூர்த்திகள்.

"திரி மூர்த்திகள்" என்பதன் உண்மை விவரம் நம்மவர்களில் அனேகர்க்கே தெரியாது. இத்தகையோர் இந்த மூவரும் வெவ்வேறு கடவுளர் என்று கருதி விஷ்ணுவே பெரியவர் என்றும், சிவனே பெரியவர் என்றும் வாதம்செய்து கொண்டும், சண்டையிட்டுக்கொண்டும், இன்னும் நீதிஸ்தலம் வரையில்கூடச் சென்று கொண்டு மிருக்கிறார்கள். இது கல்வியில்லாக் குறையால் மட்டும் நேரும் தீங்கல்ல; கல்வியைப் பூரணமாகக் கற்றோனுக்கும், கல்வியே கல்லாதவனுக்கும் அகங்காரம் உண்டாகாது. ஏனெனில், முன்கூறப்பட்டவன் கல்விகரையிலதென்றும், தன்னிலும் அதிசம் கற்றோர் அனேகருளரென்று முணர்ந்து அடக்க முடையவனாகின்றானாதலால் அகங்காரம், பெருமை முதலியன அவனிட முண்டாகக் காரணமில்லை. கல்லானுக்கோ அகங்காரம், பெருமை முதலியன இன்னவையென்றே தெரியா. நுனிப்புல் மேய்வதுபோல் கொஞ்சம் இலக்கிய இலக்கணங்களையும், மேல்போக்காய் இரண்டொரு சாத்திரங்களையும் பார்த்துவிட்டு நான் கற்றவன் என்று புகழ்பெற விரும்புவோரும் இத்தகை சண்டையில் பிரவேசிக்கிறார்கள். அந்தோ! இவர்கள் நேரில்போய் துரியபரம் பொருள், சடை, மான், மழு, டமரகம், உமை, நந்தியாவுமுடைய சொரூப மென்றும், சங்கு சக்ர கோதண்ட இலட்சுமி சமேத சொரூபமென்றும் தடவிப்பார்த்துவிட்டு வந்தவர்கள்போல் 'தான்பிடித்த முயலுக்குக் கால்மூன்றே' என்று பிடிவாதமாகச் சண்டையிட்டு இரு கட்சியாரும் சேர்ந்து சிவ விஷ்ணுக்க ளிருவரையும் தூஷித்து அத்தூஷணையால் கிடைக்கத்தக்க அபாரமான பாபமூட்டையைப் பெறுகிறார்கள். இது தக்க ஆசானிடம் மதக்கல்வி கல்லாத குறையே யன்றி வேறில்லை.

நமது சமயத்தவர் சங்கதியேயிவ்வாறாயின், நம் மதத்தின்மேல் துவேஷபுத்தி யுடையோரும் சடசாத்திரப் பயிற்சிமட்டு முடை

யோருமான அன்னிய மதஸ்தருக்கு நமது மதத்தைப்பற்றி யென்ன தெரியும். இத்தகையோர் நமது மதத்தின் உண்மையையுணராது "இந்துக்கள் பல தெய்வங்கள் உண்டென்று நம்புகிறார்கள். பிரம்மா, விஷ்ணு, சிவன் இவர்களுக்கெல்லாம் மனைவி புத்திரர் உண்டு. இப்படிப்பட்டவைகள் எங்கேனும் தெய்வங்களாவார்களோ?" என்று பறையறைகின்றனர். நம்மவரில் பாமரராயுள்ளோர் மத ஆராய்ச்சி யில்லாக் காரணத்தால் அவர்கள் வாய்ச் சொல்லைக் கேட்டநேரம் திகைத்து மயங்கி விடுகிறார்கள். ஒரு விஷயத்தில் மயங்கி யேமாந்தவனை, பிறகு இன்னும் சில விஷயங்களால் பூரணமாக மயக்கிவிடுவது சுலபந்தானே.

இக்காரணங்களுக்காகவே நாம் இதைப்பற்றி எழுதநேர்ந்தது.

கடவுளின் இலக்ஷணத்தைப் பற்றியும், அவர் யாவும் படைத்துக் காத்தழிக்கும் சாமார்த்தியத்தைப் பற்றியும், ஆன்ம லட்சணத்தைப்பற்றியும், ஆன்மாவிற்கும் பரமான்மாவிற்கு முள்ள சம்பந்தத்தைப் பற்றியும், ஆன்மா தேகத்தோடு பொருந்தி யிருப்பதில் சம்பந்தப்பட்ட தத்துவ உற்பத்தி ஒடுக்கத்தைப் பற்றியும் நமது மதத்தில் விரிவாய்க் கூறப்பட்டுள்ளதுபோல் வேறெந்த மதத்திலேனும் கூறப்பட்டிருப்பதாய்ப் புலப்படவில்லை. கடவுள் ஒருவரே என்று மட்டும் மற்ற மதங்களிலும் கூறி யிருந்தாலும், 'ஏகம்,' என்பதைப்பற்றி நமது மதத்தில் நிரூபித்திருப்பதுபோல் வேறு எதிலும் நிரூபிக்கவில்லை யென்றே தெரிகிறது. 'ஏகமே வாத்விதீயம் பிரம்மம்" "ஸஜாதி விஜாதி ஸ்வகதபேத ரகிதம் பிரம்மம்" என்ற வாக்கியங்களி லடங்கியுள்ள விசேஷ பொருள்கள் நமது வேதத்திற்கே உரியனவாகும். அவ்வளவு திட்டமாகக் கடவுள் ஒருவரே என்று கூறியிருக்க, நாம் பலதெய்வங்கள் உண்டென்று நம்புவதாகக் கூறுவோருரையை உண்மையறியார் கூற்று என்றது வேறென் னென்போம்.

ஆபின் பிரம்ம, விஷ்ணு, உருத்திரர் எனத் திரி மூர்த்திகள் என்று கூறுகிறீரே என்றாலோ, அதனானே கடவுளர் மூவர் என்று கூறியதாகக் கருதுவது பெருந்தவறேயாகும். அப்படி மூன்று பெயர்கள் கூறியிருப்பினும் கடவுள் ஒருவரென்றே தெள்ளிதின் விளங்கும்.

எவ்வாறெனின் :—உலகில் ஒரே மனிதன் இரண்டு மூன்று தொழில்களைச் செய்கிறான். திருட்டாந்தமாக ஜான்ஸன் என்ற ஒருவரே ஒரு ஜில்லாவின் கலக்டராகவும், ஜில்லா மாஜிஸ்டிரேட்டாகவும், டிஸ்டிரிக்ட் போர்ட் பிரஸிடெண்டாகவும் மூன்று தொழில்களைச் செய்கிறார். நிலவரியைச் சேகரம்செய்வதால் "கலக்டர்" என்ற பெயரும், ஜில்லாவிலுள்ள மாஜிட்ரேட் (குற்ற விசா

ரணை செய்கிறவர்) களுக்கெல்லாம் தலைமை வகித்திருப்பதால் 'டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட்' என்றும், ஜன சமூகத்தின் வசதிக்காக பாதைகள் போடுவது, சில்லரைக் கட்டிடங்கள் கட்டுவது முதலிய தொழில்களை நடத்தும் ஜில்லா சபைக்கு அக்ராசனாதிபதியாக விருப்பதால் 'டிஸ்ட்ரிக்ட் போர்ட் பிரஸிடென்ட்' என்றும் அவருக்கே மூன்று பெயர்களிடப்பட் டிருக்கின்றன.

அம்மூன்று தொழில்களில் எந்தெந்தத் தொழில் முறைமையில் யாராருக்கு அவரால் காரியம் ஆகவேண்டிய திருக்கிறதோ அவரவர்கள் அந்தந்த விலாசத்தால் அவருக்கு மனுச் செய்து கொள்ளுகிறார்கள். ஒருவன் எத்தகைய தொழில் உடையவராக அவரைக் குறிப்பிட்டு மனுச் செய்துகொள்ளுகிறானோ, அத்தொழிலைப் பற்றிய விஷயத்தை மட்டுமே யவர் நிறைவேற்றுவார். இவ்வாறு அவர் மூன்று பெயரால் மூன்றுவித வேலைகளைச் செய்தாலும் உண்மையில் ஜான்ஸன் ஒரு ஆளே யன்றி வெவ்வேறு மூன்று ஆட்களல்ல. விவகாரத்தில் மட்டும் மூன்று பேராகவே விவகரிக்கப்படுகிறார். மூன்றுக்கும் தனித்தனி வெவ்வேறு சிப்பந்திகளுமிருக்கிறார்கள். கடைசியில் அவர் ஒருவரே.

சிற்றறிவால் மாயையிற்சிக்கி இவ்வுலக சம்பந்தமான தொழில் செய்யும் ஒரு சாதாரண மனிதனுக்கே மூன்று தொழில்களும், மூன்று பெயர்களுமிருந்தால், எண்ணிறந்த அண்டங்களையும் அவற்றிலுள்ள நால்வகையோனி எழுவகைத் தோற்ற பேதமான எண்ணிக்கைக்கடங்கா ஜீவராசிகள் முதலிய யாவற்றையும் படைத்து, அதனதன் வினைக்கீடான போகங்களை யூட்டி இரட்சித்துத் துடைக்கும் அப் பரம்பொருளுக்கு எத்தனை தொழில்களிருக்கு மென்பதைக் கிஞ்சிக்ஞனாகிய மானிடன் உணரவல்லனோ ?

ஆயினும் அவருடைய தொழில்களனைத்தையும் சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்ற ஐந்து தொழில்களாகப் பிரித்து அவற்றிற்குப் பஞ்ச கிருத்தியங்களென்று நாமம் சூட்டப்பட் டிருக்கிறது. இப்பஞ்ச கிருத்தியங்களைச் செய்வோர், பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்ற பஞ்ச கர்த்தாக்கள் என்று கூறப்பட் டிருப்பினும், உண்மையில் யாவும் செய்பவர் அத்துரிய பரம்பொருள் ஒருவரே யென்றுணரும் பொருட்டே அப்பரம்பொருளை நடராஜரென்று உருவகப்படுத்தியும், அவர் சந்நிதான மாத்திரத்தில் பஞ்சகிருத்தியங்களும் நிகழ்கின்றன என்பதைக் குறிக்க அவர் பஞ்சகிருத்தியத் தாண்டவம் புரிகிறாரென்றும் கூறப்பட்டிருக்கிறது.

இவ்வைந்து தொழில்களில் திரோபவம் அனுக்கிரகம் என்ற இரண்டையும் மற்ற மூன்றிலடக்கி முத்தொழில்கள் என்றும்

மூன்று கர்த்தாக்களென்றுமே சிருஷ்டிக்கிரமத்தில் கூறப்பட்டிருக்கிறது. மாயாரகிதனாகிய ஈஸ்வரன் சுத்தமாயையி லுள்ள சத்துவம், இரஜசு, தமசு என்ற மூன்று குணங்களைக்கொண்டே சகலதொழில்களையும் நடத்துவதால், அம் மூன்று குணங்களால் சிருட்டி, திதி, சங்காரம் என்ற மூன்று தொழில்களும், பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் அல்லது சிவன் என்ற மூன்று நாமங்களும் ஏற்பட்டன. ஆனால் மேலே கூறிய திருட்டாந்தத்தில் ஜான்ஸன் ஒருவனேபோல் இங்கும் மூன்று தொழில் மூன்று நாமங்கள் இருப்பினும் பரம்பொருள் ஒருவரே யாகும்.

ஆனால் ஜான்ஸன் விஷயத்தில் மூன்று தொழில்களும் மூன்று பெயர்களும் மட்டும் கூறப்படுகின்றன. தாட்டாந்தத்தில் மூவர்க்கு மூன்று நிறங்களும், மூன்று உருவங்களும், அவரவர்கட்கு மனைவி புத்திரராதியரும் உண்டென்றும், ஏககாலத்தில் மூவரும் விவகாரங்களைச் செய்வதாகவும் புராணங்களில் கூறப்பட்டிருக்கின்றனவே யெனலாம்.

உண்மையில் முக்குணங்களுக்குத் தக்க குறிகளையே நிறங்களாகவும், அவர்கள் தொழில் செய்யும் வல்லமைகளாகிய, சத்திகளையே மனைவியர், ஆயுதங்கள் முதலியவைகளாகவும் உருவகப்படுத்திக் கூறியிருப்பதேயன்றி, நமக்கிருப்பதுபோல் மனைவிமக்க ளுண்டென்று பொருளல்ல. சிவன் மனைவியாகிய பார்வதி அவர் தேகத்திலேயே இடதுபக்க அரைப்பாகமாகப் பிரியாமலிருக்கிறாளென்று கூறப்பட்டிருக்கிறது. இவ்வாறுகூட இருவர் ஒருருவாயிருந்து அந்த இருவரும் சந்ததியையுண்டாக்கலாகுமோ—விஷ்ணு இலக்குமியை மார்பிலும், பிரம்மா வாணியை நாவிலும் வைத்துக்கொண் டிருக்கிறார்களென்றும், பரமசிவன் கண்ணினின்று முண்டான ஆறு அக்னிப் பொறிகளினின்று சுப்பிரமணியர் உற்பத்தியாயின ரென்றும் கூறப்பட்டிருக்கிறதெனின், இவற்றின் பொருள்கள் தத்துவார்த்தமாகக் கொள்ளத் தக்கனவென்று சொல்ப அறிவாளியும் எளிதில் உணரலாமன்றோ! இதையறியாது திரிமூர்த்திகள் நம்போல் மனைவிமக்களையுடையவர்களென்றும் அதனால் இந்துக்கள் வணங்குவது தெய்வமல்லவென்றும் கருதுவோரை அறிவிலிகளென்றே மதிக்கவேண்டும்.

மேல் கண்டவற்றின் தத்துவார்த்த விவரங்களனைத்தும் நமது நூல்களி லிருக்கின்றன. ஈண்டு அவற்றைப்பற்றி விரிக்கப்புகின் சஞ்சிகையில் இடம்போதாதென வஞ்சி விடுத்தாம். ஆயினும் நாமரூபமற்ற கடவுளுக்கு இவ்வாறெல்லாம் நாமரூபக் கிரியைகள் கற்பித்து உருவகப்படுத்தி விவகரிப்பானேன் என்று கேள்வியுண்டாகலாம். இத்தகைய ஏற்பாடுகளும் சரியை, கிரியை, யோகம்,

ஞானம் என்ற சோபானக் கிரமங்களும் இருப்பதால்தான் ஹிந்து மதம் எத்தகைய அதிகாரிகளுக்கும் மோக்ஷமார்க்கத்தைக் காட்டும் பெருமை வாய்ந்ததாகவும், உலகில் இப்போதுள்ளவையும் இனி யுண்டாகக் கூடியவையுமான எல்லாமதங்களுக்கும் அஸ்திவாரமாகியும், தாயகமாகவும் இருக்கும் மகிமை வாய்ந்ததாகவும் விளங்குகிறது.

இவ்வாறு உருவகப்படுத்தியிருப்பதால்தான் சரியை, கிரியைகளாகிய மார்க்கங்களை யனுஷ்டிப்பதற்கு அநுகூலமாகவிருக்கிறது. அம்மார்க்கங்களோ மோக்ஷமென்னும் மேல்மாடிக்கு ஏறிச்செல்லும் மார்க்கமாகிய ஏணியின் படிகள்போன் றுள்ளன.

"விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான மொருநான்கு
மரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே"

என்று நமது தாயுமானவர் அருளிய வாற்றல் இவை மோக்ஷம் பெறுதற்கு இன்றி யமையாதன வென்பது நன்கு விளங்கும்.

ஒரு பொருளை யொருவன் பெறவேண்டுமாயின் முதலாவது அதன்மேல் அன்பு உண்டாகவேண்டும். அன்பும் ஆவலும் உண்டானாலன்றி அப்பொருள் கிட்டாது. இப்போது மோக்ஷமென்பது கடவுளை யடைவதேயன்றி வேறில்லை. கடவுள்மேல் வைக்கும் அன்பிற்கே பக்தியென்றுபெயர். பக்தியொன்றினால் மட்டுமே மோக்ஷமடையலாமோ வெனின் அடையலாம. அவ்வாறடைந்த மகான்கள பலருளர். அதற்கு முதற்றரமான திருட்டாந்தம் கண்ணப்பரேயாகும். பக்தியெனின் சாமானிய பக்தி போதாது. அனன்னிய பக்தி வேண்டும். அது யாவர்க்கும் கிடைத்தற் கெளிதல்ல; அதனுனே முதலாவது பக்தியைக் கைககொண்டு, பிறகு அவ்வழி மனவொடுக்கமடைந்து தன்னை யறியவேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. இது நிற்க,

இப்போது மனம் ஒன்றின்மேல் பிரியம் வைக்கவேண்டுமாயின், சாதாரணமாக எத்தகைய பொருளின்மேல் அது இச்சைவைக்கும் சுபாவமுடையதாக விருக்கிறதென்று கவனிப்போம். நாமரூபமான பொருளின்மேல்தான் அதற்கு இச்சைசெல்வது வழக்கம். ஒரு உருவமும் இல்லாத விடத்தில் மனம எல்லோருக்குமே பற்றுது. மனிதரில் மந்ததரம் மந்தம் என்ற இருதரத்தோரே பெரும்பாலோர். தீவிரமுடையோரே அரிது. அதிலும தீவிரதரமுடையோர் மிக்க அரிது. அவ்வாறிருக்க அரூபியான ஆண்டவன் மேல் யாவர்க்கும் பக்தி யெவ்வாறுண்டாகும்? ஆதலின் நாமரூப கற்பனையுடைய திரிமூர்த்தி சொரூபங்களில் ஒன்றின்மேல் பகதி

வைக்கவேண்டுமென்றே அவ்வாறு ஏற்படுத்தப்பட்டது. ஆன்றோர் உபதேசித்திருப்பதும் அதுவே.

"உணர்ந்துணர்ந் திழிந்தகன் றுயர்ந்துரு வியந்தவிந் நிலைமை
யுணர்ந்துணர்ந் துணரினு மிறைநிலை யுணர்வரி துயிர்கா
ளுணர்ந்துணர்ந் துரைத்துரைத் தரியய னென்னு மிவரை
யுணர்ந்துணர்ந் துரைத்துரைத் திறைஞ்சுமின் மனப்பட்ட
தொன்றே." எனவும்,

"ஒன்றெனப் பலவென வறிவரும் வடிவினு ணின்ற
நன்றெழி னாரண னான்முக னரனென்னு மிவரை
ஒன்றநும் மனத்துவைத் துன்னிநும் மிருபசை யறுத்து
நன்றென நலஞ்செய்வ தவனிடை நம்முடை நாளே"
என்றும்,

அருளப்பட்டிருப்பது காண்க. ஆகையால் மூவரில் ஒருபேதமு மில்லை யென்றுணர்ந்து தனக்குப் பிரியமான தொன்றை யுபாசிக்க வேண்டும். மற்றொன்றைத் தூஷிப்பவன் தன் உபாசனையின் பலனை யிழந்து தூஷித்தபாபத்தையே பெறுவான். ஏனெனின் மூன்றும் ஒன்றேயாதலின். திருட்டாந்தத்தில் கலக்டரைத் தூஷித்தவன் டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்டிரேட்டுக்கு மட்டும் நண்பனுவனே—இல்லை. ஜான்ஸனுக்கும் அவன் விரோதியே.

அஞ்ஞானத்தில் மூழ்கித் தன்னைச் சீவனாகவும், நாமரூப உலகமும் அதிலுள்ள போகபாக்கியங்களும் உண்மையெனவும் எண்ணி அவற்றில் ஆவல்கொண்டு அனுபவித்து உழன்றுகொண்டிருப்பவன் கடவுளை உருவமாகப் பாவித்தால் தான் அதனிடம் பக்திகொள்வான். எங்கணும் நிறைந்து எல்லாம் தன் உருவமாகத் தானே யாவுமாக யாவற்றிலும் உள்ளும் புறம்பும் நிறைந்து நிற்கும் அருட்கடலாகிய பரம்பொருளை, இத்தகைய ஜீவன் பக்திக்காக ஒரு உருவமாகப் பாவிப்பதால் பாபம் என்று கருவது அவனுடைய உண்மைக்குணத்தை யறியாத்தன்மையே. ஆண்டவன் சர்வ வல்லமையுடையவராதலின் மனிதர் அவரை எவ்வாறு பாவித்து உபாசிக்கிறாரோ அவ்வாறே அவர்களுக்குத் தரிசனமளிக்கிறா ரென்பதுவும் அனுபவம்.

கடவுளோ எதிலும் விருப்பு வெறுப்பற்றவர். அவரிடம் நமது பக்தியை யெப்படி வெளியிடுவது? நாமரூபமுடைய மனிதனிடம் நம் அன்பைக் காட்டப் பலவழிகளால் அவனை யுபசரிக்கிறோம். அதுபோல் கடவுளை யொரு உருவமாகப் பாவித்தாலன்றி நம் பக்தியை வெளியிடமுடியாது. கடவுளுக்கு நம்மா லாகவேண்டிய தொன்றுமில்லை யாதலின் அவர் நம் அன்பைமட்டுமே ஏற்றுக்

கொள்கிறானன்றிச் செய்கையையல்ல. கடவுளுக்கு எச்சில் மாமிசம் நிவேதித்த கண்ணப்பநாயனார், கற்களால் அவரையர்ச்சித்த சாக்கியர் ஆகிய இவர்கள் செய்கைகளே இதற்குப் போதுமான அத்தாட்சியாகும்; விரிக்கிற்பெருகும்.

நாமரூபப் பிரபஞ்சத்திலுள்ள பொருள்கள்மேல் இச்சைவைத்து அனுபவித்துக் கொண்டிருந்தும், இரண்டொரு சாத்திரங்களை மேல்போக்காகப் பார்த்துவிட்டு "உலகம் பொய் ; யாவும் பொய்; நாமே பிரமம். யாவும் பிரம்மமே" என்று கூறிவிட்டு அதனால் கோயிலுக்குப்போவதும் அனாவசியம் என்றும் கூறுவது சுத்த மூடத்தனம். அதுவே அவனை மோட்சத்திற்கு எத்தனிக்காது தடுத்துவிடும். நாம் பாசத்தில் உழலுமட்டும் பாசம்மெய்யே, யாவும் மெய்யேதான். தரையில் நிற்கவே தள்ளாடும்போது, வானத்தில் பறப்பதைப்பற்றிப் பேசிக்கொண்டால் பயனென்ன? யாவும் பொய் என்று கண்டவனுக் கடையாளம் அவற்றில் பற்றில்லாது நீங்கிவிட வேண்டும். அவனுக்கு யாவும் பொய்தான். ஏனெனில், அவன் தன்னையறிந்து யாவும் பொய் யென்றனுபவமாகக் காண்கிறான். அதில் சிக்கியிருக்குமட்டும், அந்த அஞ்ஞானதசையில் அவற்றை மெய்யாகவே நம்புமட்டும் மெய்யே.அதைவிட்டு யாவும் பொய்யென்று வாயால்மட்டும் கூறுகிறவன் அவற்றை யொழிக்கவே முடியாது. அதனாற்றான் தாயுமானவர் "ஓதரிய துவிதமே அத்துவித ஞானத்தை யுண்டுபண்ணு ஞானமாகும்..." என்றனர்.

இவற்றை யின்னும் விரித்துக்கூற ஈண்டு இடமில்லை. இவ்வளவிலேயே இது அளவு மீறிவிட்டதென் றஞ்சுகிறோம். இன்னொரு சந்தர்ப்பத்தில் இவற்றைப்பற்றி விரிவாகக் கூறுவாம். இதுவரையில் திரிமூர்த்திகளில் பேதம் பாராட்டலாகா தென்றும், அவற்றில் ஒன்றையும் தூஷிக்கலாகா தென்றும் உணர்வதோடு, நாம் மூன்று தெய்வங்களை வணங்குவதாகவும், அத்தெய்வங்கட்கு மனைவிமக்கள் இருப்பதாகவும் கூறுவோரது வீண்புரளிக்கு மயங்காமல், அவசியமாயின் மேற்கண்ட உண்மையாகிய கதாயுதத்தால் அவர்கள் வீண் கூற்றாகிய மண்ணாங்கட்டிகளை நியாயமாகிய காற்றில் பறக்கவிடவேண்டு மென்று நமது நண்பர்களை வேண்டிக் கொள்கிறோம். மூவுருவும் ஒருருவாய் எங்கு நிறைந்த அவ்வருட்பெருஞ் சோதியே யருள் புரியப் பிரார்த்திக்கிறோம்.

ஓம் தத் சத்.

---

## மாம்பழக்கவி

(190-வது பக்கத்தொடர்ச்சி)

கல்விபயிலும் பருவம்:—வீட்டிலேயே உபாத்தியாயரை ஏற்படுத்தி வைத்துக் கல்வி பயில்வித்து வருநாளில் ஒன்பது வயதிற்குள், இலக்கண இலக்கியங்களில் வல்ல புலவர்களும் கேட்டு ஆனந்தமும் ஆச்சரியமும் அடையும்படியான புலமையும் சாதுரியமும் அவரிடம் விளங்கின. ஒரு தரம் படிக்கவோ, சொல்லவோ கேட்ட எந்த விஷயத்தையும் பிழையின்றித் திருப்பி அவ்வாறே சொல்லும் 'ஏக சந்த கிராக்யம்' என்ற சக்தி அபாரமாய் விளங்கினதும் தெரியவந்தது. ஆனதுபற்றி மாம்பழக் கவிராயருடையவீட்டு உபாத்தியாயர்கள் கணக்கில் அகப்படமுடியாது. ஒருவராவது இவருக்குச் சேர்ந்தாப்போல் ஒரு மாதங்கூட உபாத்தியாயரா யிருந்ததில்லை. மேனாட்டு ஆங்கிலப் புலவர்களுள், மில்டன், (Milton), போப், (Pope), மெக்காலே (Mecaulay) முதலியவர்கள் போன்று இவர் பன்னிரண்டு வயதிற்குள் தாய்ப்பாஷையிலும், பிற பாஷையிலுமுள்ள சிறந்தநூல்களின் நுட்பா நுட்பங்களை நன்கு தெரிந்து கொண்டனர். எப்பொழுதும் வீட்டில் வடமொழி, தென்மொழிப் புலவர்கள் உண்ண, உடுக்க, ஒதுங்க, உறங்கவேண்டிய சமயம் நீங்கலான மற்ற வேளைகளில், கூட்டங் கூட்டமாய்க் குழுமியிருப்பதே வழக்கம். இவர்கள் சபையில் யானைக்கூட்டங்களி னிடையே யிருக்கும் சிங்கக்குட்டி போன்று விளங்கினர் மாம்பழக்கவி. இத்தகைய அற்புத அறிவின் வளத்திலே ஈடுபட்டு மிகுந்த மனமகிழ் வெய்தினர் முத்தையாசாரியார். 'மாம்பழம்' என்றபெயருக்கொப்ப யாவரிடத்தும் மாதுரியமாய்ப் பேசியும், வினயத்தோடும், சாதுரியத்தோடும், கற்பனாசக்தியோடும், புலமையோடும் கூடிச் சிறந்து உறவாடினர். பாண்டிய நாட்டிலுள்ள புலவர் பலரும் இவரைக் காண்பான் வரத்தொடங்க மாம்பழம் ஞானச காந்தம் என விளங்கினர்.

'மாம்பழக் வி' ராயருடைய தீவிர புலமையைக்கண்ட அனேகர் இவருக்குச் சீடராய் அமர்ந்தனர். கவி யியற்றும் ஆற்றலும் இவரிடம் திகழ்ந்தது. பழனியாண்டவன் பாதகமலங்களில் வம்ச பாரம்பரையை ஒட்டி, பாமாலைகள் சூட்டிப் போற்றலாயினர். ஞானசிரியனை முருகனையே தன் குருவென மதித்திருந்த 'மாம்பழக்கவி' ஆறுமுகப் பெருமானை முன்னிட்டே எந்தக் காரியத்திலும் பிரவேசிக்கும் வழக்கத்தைக் கைக்கொண்டார். கட்புலன் குறைந்ததினால் ஏகாக்கிரக சித்தம் தானே கைகூடிற்று. இந்தச் சக்தியின் (Concentration) பெருமையை விரிக்கிற் பெருகும். இவர் கண்ணில் ஆதவனெனக் கற்றவர்களின் சபைகளில் விளங்கினர். சிலநாட்கள் சென்றதும், பேரும் புகழும் பெற விரும்பியதினால், சிஷ்யர்களுடன் இராஜ சம்ஸ்தானங்களுக்குச் சென்று தம் புலமையைத் தெரியப்படுத்திப் பரிசுபெற வேண்டுமென்றும், தம்முன்னோர்கள் சிற்பசாஸ்திரப் பயிற்சியிற் றேர்ந்தவர்களாய் மன்னர்கள் ஆதரவைப்பெற்ற வவ்வாறே கல்வி, கேள்விகளிற் சிறந்தாரெனப் பெயர்பெறும் பாக்கியம் பெரிதெனவும் மதித்தனர். எந்தப் புதிய நூலையும் ஒருதரம் வாசிக்கக் கேட்டதும் அது ஒரு பழைய நூல் என்று சாதிக்கும் சாதுர்யமும், சாமார்த்தியமும் தம்மிடமுளதெனத் தெரிந்துகொண்டு 'மாம்பழக்கவி' இராமநாதபுரம் ஜமீன்

இறைவர் முத்து ராமலிங்க சேதுபதியின் சகோதரரும், பாண்டித்துரைத் தேவரின் தந்தையும், தமிழபிமானியும், புலமை பெற்றவருமான பொன்னுசாமித் தேவர் சபையை நெருங்கவிரும்பித் தமது சீடர்களுடன் இராமநாதபுரம் சென்று ஓர் விடுதியை அமர்த்திக்கொண்டு அதில் சின்னாட்கள் தங்கியிருந்து சமஸ்தானத்தை அணுகவேண்டுமென்ற தம் விருப்பத்தை அவ்வூர்ப் புலவர்களிடம் தெரிவித்தனர்.

கண்ணில்லாதவரை இராஜசமுகத்தில் வரவேற்பது லௌகிக வழக்கத்திற்கு விரோதமென்று மதித்த புலவர்களுக்குத் தம் புலமையின் வளத்தைத் தெரிவிக்கச் சமயம் வாய்க்குமெனக் காத்திருந்தார் சிலகாலம். சமஸ்தானத்தில் கேட்ட வோர் கேள்விக்கு விடை கொடுக்க முடியாது மயங்கிய புலவன் ஒருவன், மாம்பழக்கவியின் உதவியைக்கொண்டு மறுமொழி கூறிப் பரிசுபெறும் சமயத்தில் நடந்த விருத்தாந்தங்களை அப்புலவன் பொன்னுசாமித் தேவருக்குச் சொல்லவும் உடனே மன்னன் மனமகிழ்ந்து, மாம்பழக்கவிராயரை வரவேற்றனர். அவர் வந்ததும் வினயத்தாலும், சாதுரியத்தாலும், புலமையினாலும், முருகன் அருட்பிரவாகத்தாலும் பொன்னுசாமித் தேவருக்கு மனமகிழ்ச்சியும் அன்பும் உண்டாகச் செய்தனர். அன்றுமுதல் சமஸ்தான வித்வசிரோன்மணியாய் 'மாம்பழக் கவிச்சிங்கம்' என்ற பட்டப்பெயர் புனைந்து விளங்கினர். பொன்னுச்சாமித் 'தேவருந் தமிழில் தேர்ந்த விற்பன்னரானதுபற்றி சதாகாலமும் மாம்பழக் கவிச்சிங்கத்தோடு சேர்ந்து இருக்க விரும்பினர். அவ்வக்காலங்களில் சங்கீதம், பரதம், தர்க்கம், மீமாம்சம் முதலிய கலைகளில் தமக்குள்ள விசேஷப் பயிற்சியைச் சமயோசிதமாக உபயோகித்ததைக் கண்டும், சம்பாஷணையிலும் பாட்டிலும் செறிந்துள்ள சாதுரியம் (Wit) வேடிக்கை (Humour) புலமை கற்பனைகளைக் கண்டும் காதல் கொண்டதே இவரிடம் இறைவன் காட்டிய கருணைக்கும், வண்மைக்கும், ஆதரவுக்கும் முக்கிய காரணம்.

இவ்வாறு இராமநாதபுரத்தில் மன்னர் ஆதீனத்தில் புகழுடன் சன்மானங்களும் ஏராளமாகப் பெற்று இருக்க விரும்பிய இவரின் விருப்பத்தைக் கைகூட்டிய முருகன் பாதங்களில் இவர் புதிதுபுதிதாகப் பாமாலை சூட்டிச் சேவித்து வந்தனர். பாமபழக் கவிராயர் வாயில் வந்த வார்த்தைகள் வாய்மையோடு சிறந்து விளங்கின. காளமேகப் புலவர் போன்று ஆசுகவி சொல்வதில் இவர் விசேஷவன்மை பெற்றிருந்தனர். திரிபு, மடக்கு, இயமகம் முதலிய சாதுரிய சாதனங்களின் திறம் இவரிடம் நிரம்பியிருந்தது. யூகத்தினாலே எதையும் கண் முன் கண்டவர் போன்று கற்பித்துக் கூறும் சாமர்த்தியமோ சிறந்திருந்தது. இவ்வாறு இவர் மனவமைதியோடிருந்த நாளில் பல தேசங்களுக்கும் சென்று ஏனைய புலவர்களுடன் உறவாட வேண்டுமென்ற எண்ணம் இவருக்கு எவ்வாறோ உண்டாயது. அதனால் பொன்னுசாமித் தேவரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு 'கற்றோர்க்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பு' என்றபடி, எங்கெங்கே சென்றாலும் அங்கங்கே அருமைபெருமையுடன் வரவேற்கப்பட்டு, சன்மானங்களும் பரிசுகளும் அளிக்கப்பெறுவர் புலவர்கள் என்ற தைரியத்துடன் 'மாம்பழக்கவிச் சிங்கம்' தம்குழாத்துடன் திருநெல்வேலி, திருச்சிராப்பள்ளி, சேலம்,

கோயம்புத்தூர், தஞ்சாவூர் முதலிய விடங்களுக்கும், தொண்டைமண்டலத்திலுள்ள விசேஷத் தலங்களுக்கும், சென்னப்பட்டணத்திற்குஞ் சென்றனர். சென்ற விடங்களில், ஆங்காங்குள்ள பிரபுக்களுக்கும், உத்தியோகஸ்தர்களுக்கும் சீட்டுக்கவி யனுப்புவர். தமக்குத் தேவையானவைகளை அவர்களிடம் பெற்றுக்கொள்வர். ஒருவன் தன் பெருமைகளைத்தானே சொல்லிக்கொள்வது தற்கால நாகரீகத்திற்கு ஒருவாறு விரோதமெனத் தோற்றும் என்றாலும், யுத்தகளத்திலும், நியாய ஸ்தலங்களிலும், தெரியாத ஓரிடத்திலும் தன்னைத்தான் இன்னானெனத்தெரிவித்துக்கொள்வது அத்தியாவசியம். மேலும், புலவர்கட்குச் சீட்டுக்கவி மூலமாய்த் தம் திறமையைப் பிறருக்குத்தெரிவிப்பது பண்டைக்காலந்தொடங்கி வழக்கத்தில் வரும் மரபு. இக்காலத்திலும் புலவர்களுக்கு இதுவழுவு அல்லவென்பது துணிபு.

கவிச்சிங்க மென்ற பெயரைத் தமிழ் உலகில் நாட்டிக்கொண்டு கல்விக்கொடியுயர்த்திய மாம்பழக்கவிராயர் பழனியம்பதியை விட்டுப் பெயர்ந்து போய் ஏறக்குறையப் பத்து வருஷகாலமாயிற்று. அதனால் அவர், தாய் தந்தையரை வயது காலத்தில் பிரிந்திருக்க மனமாற்றாது ஊருக்குத் திரும்பினர். இப்போது அவருக்கு வயது சுமார் இருபத்தேழு இருக்கலாம். அதன்மேல் அவர் வேசையர்தம் மயல் போக்கி, வாழவிரும்பித் தம் மரபில் நெருங்கிய பந்துக்களுக்குள் ஒரு பெண்ணை மணம் புரிந்து சுகமே யில்லறம் நடாத்தலுற்றனர். அப்போது கருமவசத்தால் வந்துற்ற 'மாசுடையபிணி நீங்க' பழனிக்கோயில் விண்ணப்ப மூலமாகத் தண்டபாணியைத் துதித்துச் சில காலம் பிணி நீங்கிச் சுகமுற்று வாழ்ந்தனர். 'வறுமைக்குற்றம் நீங்க' ஷண்முகநாதனை இவர் உண்மையானபக்தியுடன் ஆராதித்துவந்த விசேஷ மகிமையால் இளமைப் பிராயத்தில் இவரை ஆதரித்த ஜமீன்தார்களும், மிட்டாதார்களும் இவருக்கு வேண்டியபோது போதியதிரவிய சகாயம்செய்து வந்தனர். 1836-ம் வருடத்தில் பிறந்த இம் மாம்பழக்கவிராயர் 1884-ம் வருஷம் மார்ச்சுமாதம் தமது பிராணன் நீங்கும் சமயமறிந்து சூழ்ந்திருந்த சீடர்கள் பந்துமித்திரர்களுக்குத் தெரிவித்து முருகனைத் துதிசெய்துகொண்டு 'பிழைபொறுத்தாளுதி' என்ற பிரார்த்தனையுடன் நிர்விகற்பமான மனதுடன் சமாதியிலடங்கினார்.

மதுரகவி, கவிகுஞ்சரபாரதி, மீனாட்சிசுந்தரம் பிள்ளை, வேம்பத்தூர் பிச்சுவையர் முதலிய வித்வ சிரோன்மணிகள் மாம்பழக்கவிராயர் காலத்திருந்த சிறந்த வித்துவான்களிற் சிலர்.

என். எஸ். ராமச்சந்திர ஐயர், பி.ஏ., எல்.டி.

---

## சிறுவர்க்குரிய சிறந்த உபதேசம்.

1. உலகத்தில் மானிடராய்ப் பிறந்தவர்க்கு முக்கியமான துணை இரண்டுண்டு:—அவை, கல்வி, செல்வம் என்பனவாம். கல்வியைப் பெற வேண்டியது மானிடர் ஒவ்வொருவர்க்கும் இன்றியமையாத முதற் காரியமாகும். ஏனெனில், கல்வியில்லாதவன் உலகத்தில் குருடனுக்குச் சமானமாவன். குருடனுக்கு நல்லவழி, கெட்டவழி தெரிந்து நடப்பது கூடாமைபோலக் கல்வி யில்லாத கயவனுக்கு நன்மை, தீமை யுணர்ந்து நடப்

பது கூடாமையாகும். நன்மை, தீமை உணராதவன் வாழ்வு பழிப்புக்கிட மாகும். பழிப்பிற்கு இடமாய் வாழ்வதிலும் உயிர் விடுவது நல்லதாம்.

கல்வி, நன்மை தீமைகளையும், நன்னெறி, தீநெறிகளையும் விளக்கித் துன்ப மொழிக்குந் தோழன். தர்மா தர்ம சொரூபங்களையும், அவற்றின் பயனையும், மனம், வாக்குகளுக் கெட்டாத பரம்பொருளின் இலக் கணத்தையும், சொர்க்கநரகாதி பதவிகளின் சுகதுக்கங்களையும் எடுத்துக் காட்டி நல்வழிப் படுத்துமொரு நல்ல குரு.

'பொருளிலார்க்கிவ்வுலகமில்லை'— என்பது முன்னோர் மொழி. ஆத லின், பொருள் இல்லையாயின் இவ்வுலக வாழ்வில்லை யென்றாயிற்று. இது ஒவ்வொருவருடைய அநுபவத்திலும் உணரக்கூடியது. இதனாலேதான் ஒளவைப் பிராட்டியார், திரைகட லோடியும் திரவியந் தேடு என்று கட் டளையிட்டனர். பொருள் உலக வாழ்விற்கு இன்றியமையாததென்று உண ராமல் சோம்பித்திரிபவர் இடர்ப்படுவர் என்பது திண்ணம். சோம்ப ரென்பவர் தேம்பித்திரிவர் என்று படித்திருக்கிறீர்களல்லவா? ஆகலின் பொருளை எப்பாடுபட்டேனும் தேடக்கடவீர்கள். எப்பாடுபட்டேனு மென்றது நல்ல வழியில் எப்பாடுபட்டேனுமென்று கொள்ளல்வேண் டும். தீவினைவிட் டீட்டல் பொருள் என்பது ஒளவைப் பிராட்டியாரின் கட்டளையல்லவா?

பணம் பல செய்யும்; பணமில்லாதவன் பிணம். பணமிருந்தால் பந் துப்பேர் வாவென்பார்கள். "கல்லானேயானாலும் கைப்பொருளொன்று ண்டாயின் எல்லோருஞ்சென்று எதிர்கொள்வர்—" என்றார் ஆன்றோர். இவைபோல் வழங்கும் முதுமொழிகள் செல்வத்தைப்பற்றிப் பல வுண்டு. அன்றியும் பணம் நினைத்ததை முடிக்கத் தக்க நேசனுக்கு நேராகும். சகல வின்பங்களையும் தடையற ஊட்டும் தாயாகும்.

பணம் இத்துணை நன்மை பயப்பதெனினும் இது கல்வி என்னும் இன்னுமொருதுணைவனோடு சேர்ந்திருக்குமாயின் இகபர சுகமிரண்டும் தடையறக் கிட்டும். ஆகையினால், உலகத்தில் தேடத்தக்கவைகளுள் இவையிரண்டுமே சிறந்தனவாம்.

2. சத்தியம் தவறாமல் நடக்க முயலுங்கள்:—சத்தியத்தைக் காக்க அரிச்சந்திரன் என்னும் வேந்தன் பட்டபாட்டைச் சிந்தியுங்கள். சத்தியமுடையவனிடம் இலக்ஷ்மிதேவி வாசம் பண்ணுவள். இலக்ஷ்மி தேவியின்கருணை யுண்டானபோது சகல பாக்கியமுந்தானே யுண்டாகும். தயை, சாந்தம் முதலிய நல்ல குணங்களும் ஓங்கும். இந்த நல்ல குண முடையவனுக்கு எங்கும் தடையற்ற மரியாதையும் புகழும் உண்டாகும். அவனுக்குப் பகைவர் இருக்கமாட்டார்கள். இம்மை மறுமை யிரண்டிலும் அவனுக்கின்பமே கிடைக்கும். ஆதலால் சத்தியத்தைப் போற்றுங்கள்.

3. மருந்துவேண்டாம்:—கல், மயிர், தவிடு, உமி இவற்றுடன்கூடிய அன்னத்தைப் புசியாதே. அமிதபோஜனத்தை விலக்கு. மனதுக்குப் பெரு ங்கவலை கொடாதே. நெடுந்தூரம் நடவாதே. மல ஜலத்தை அடக்காதே. நன்றாய்ப்பழுக்காத பழங்களையும், அழுகிய பழங்களையும், பழைய கறிகளை யும் உண்ணாதே. புசித்தபின்பு முழுகாதே. தூக்கத்தைக் கெடுத்துக்கொள்

ளாதே. அசுத்த நீரை உபயோகிக்காதே. அதிக வெப்பத்திலும் பனியிலும் அலையாதே. பெருங்காற்றில் உலவாதே. சருகு இலை இவை யூறிய நீரில் முழுகாதே. அதிகமான பாரஞ் சுமக்காதே. நன்ருய் உழைப்பெடுத்துக்கொள். காலை இளவெயிலிற் காயாதே. இரவில் தயிர், கீரை முதலியவற்றை உபயோகியாதே. இவையன்றி விதிவிலக் கறிந்து நட. இவை கவனிக்கப்படின் வியாதி வரவொட்டாமல் காத்துக்கொள்ளலாம். மருந்து வேண்டாம்.

4. குருவை நம்பு:—குருவே உன்முன் உருவங்கொண்டு வந்திருக்குங் கடவுள். குருவைச் சிந்தித்து எந்தக்காரியத்தையுந் தொடங்கு. அப்படித் தொடங்கிய காரிய மெதுவும் தடையின்றிக் கைகூடும். குருமொழி மறவாதே! "குரு மொழியே மலையிலக்கு"—என்பது போதனை—குருவையல்லாமல் தெய்வம் பிறிதில்லை.

5. நல்ல சிநேகன்:—சந்திரனிடத்துக் களங்கமிருக்கிற தல்லவா? அது சந்திரன் வளரும்போது வளர்வதும், அது தேயும்போது மறைவதும் பிரத்யக்ஷம். குளத்திலுள்ள அல்லி, கொட்டி முதலியன குளத்தில் நீர் நிறையும் போது உயர்ந்து நீர் குறையும்போது குன்றுகின்றன. தாமரை சூரியோதயமாகும்போது மலர்ந்து அது மறையும்போது வாடுகின்றது.

இவைபோல், நண்பன் என்பவன் தன் நண்பனுக்குத் துன்பம் வந்த காலத்தில் தானும் அத்துன்பத்தை அனுபவித்து வந்து, இன்ப காலத்தில் தானுமுடனிருந்து அவ்வின்பத்தை அனுபவித்தல் வேண்டும். இப்படி நடப்பவனே உண்மை நண்பனுவானென்றறிக.

வரகவி-தி. அ. சுப்ரமண்ய பாரதி.

---

## கடிதம்.

நான் சென்ற ஒரு வருட காலமாக நமது ஆனந்தபோதினியைப் படித்து வருகிறேன். இதில் அரும் பெரும் விஷயங்கள் மாதந்தோறும் வெளி வருகின்றன என்பதும், ஜனங்களின் தற்கால நாகரீகத்தால் அவர்கள் அடையும் க்ஷீணதசையும், நமது தாய்ப்பாஷையாகிய "தமிழ்" நாளுக்கு நாள் அவகேடு அடைவதும் யாவரும் அறிந்த விஷயங்களே யாகும். இப்படித் தமிழ்குறைவதற்கு யாது மூலகாரணம் என்பதைக்கண்டு குறைகூருது தற்கால மனிதர் தமிழை அசட்டை செய்கிருர்கள் என்று மட்டும் குறை கூறி நிற்பது மனச்சாட்சிக்கு ஒவ்வாத காரியமேயாம். அவைகளை இங்கு விஸ்தாரமாக எழுத நமக்கு அவகாசமில்லையாகையால் சுருக்கமாகச் சொல்லிமுடிப்பாம்.

"தேசங்கள்தோறும் பாஷைகள் வேறு" என்றபடி ஒவ்வொரு தேசத்திலும் ஒவ்வொரு பாஷை தொன்று தொட்டு வழங்கி வருகிறதை யாவரும் அறிவர். ஆனல் எக்காலமும் இங்கிலாந்தில் ஆங்கிலமும், ஜர்மனியில் ஜர்மன்பாஷையும்தான் பேச வேண்டுமோ அல்லது படிக்க வேண்டுமோ? அப்படியாயின் இங்கிலாந்திலும், ஜெர்மனி, அமெரிக்கா

ஜப்பான் முதலிய தேசங்களிலும் உள்ள சகல கலாசாலைகளில் ஏன் பல வேறு பாஷைகளைக் கற்றுக்கொடுக்கவேண்டும்? அன்னவர்க்கு அத் தேயத்துப் படிப்பு போதாதோ? அந்தோ! படிப்பென்றால் தமிழ் ஒன்று தான் படிப்பா, ஆங்கிலந்தான் படிப்பா, எதுதான் படிப்பு? "கண்டது கற்கப் பண்டிதனாவான்" என்பதுபோல், எந்தெந்த பாஷைகள் சொற் சுவை,பொருட்சுவை முதலியபொருந்தியனவா யிருக்கின்றனவோ அவை களைக் கட்டாயமாய் ஒருமனிதன் கொஞ்சம் கண்டு தெளியவேண்டும். முழுதும் கற்க ஆயுள் போதாதாகையால் சாராம்சத்தைக் கிரகித்தே தீர வேண்டும். ஒருவன் ஒரேபாஷையால் இவ்வுலகத்தைச் சுற்றிவரமுடியுமா? உலகத்திற்குத் தமிழ் ஒரே பாஷைதானா? அல்லவே, அப்படி யிருக்க, யாவருக்கும் தெறிந்ததும் இராஜ பாஷையாயு மிருக்கிற ஆங்கிலத்தை ஏன் கற்கலாகாது? இது முதலாவது.

இரண்டாவது.—இது எல்லாவற்றிலும் முக்கியம். தமிழே இத் தென் இந்தியாவில் வழங்குகிறதென்று வைத்துக்கொள்வோம். இங்கிருக் கும் ஒரு நகரவாசி, லாகூரில் இருக்கும் ஒரு சாதியானோடு பேசவோ, படி க்கவோ இயலுமா? இப்படி இருவரையும் கலக்கவைப்பது எப்பாஷை. ஆங்கிலம் நடுவில் வந்துதான் இரண்டு பேருக்கும் உதவுகிறது. இவ்விந் தியாவில் 500 மைல் தூரத்தில் இருக்கும், இரண்டுவெவ்வேறான நகர வாசிகளுக்கு, 2000 மைல் தூரத்திலிருந்து வந்த ஆங்கிலமன்றோ ஒரு வரை யொருவர் தெரிந்து கொள்ளச்செய்கிறது.

மூன்றாவது.—தேசத்தில் பல பாஷைகளிலும் இராஜ பாஷையே பிரதானம். மற்றவையெல்லாம் இரண்டாம் பாஷைதாம். அந்தந்த அரசா ட்சியில் அந்தந்த பாஷைதான்உலாவிவரும். முதற்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் இருந்த காலத்தில் தென் இந்தியாவில் சேர, சோழ, பாண் டிய தமிழ் இராஜாக்கள்அரசாண்டுவந்ததனால் யாவரும் தமிழ் ஓதியுணரும் படி நேர்ந்தது. பின் மொகலாயர் வந்து அரசாண்ட பிறகு ஹிந்துஸ்தான் பாஷைபரவியது. இப்போது ஆங்லேயர் அரசாட்சி ஆகையால் ஆங்கிலம் தன்னுடைய உன்னதநிலையில் இருக்கவும் ஆச்சரியப்படவேண்டுமோ? காலத்தோடு சுழன்று கொண்டுதான் இருக்கவேண்டும்.

நான்காவது.—ஒருவன் பரமஏழை, ஆனால் "தமிழ்" பாஷையில் பூரணபாண்டித்திய முடையவன். அரசாட்சியோ ஆங்கில அரசாட்சி. இவன் எங்கு சன்மானம் பெறலாம்? முற்காலத்தில் ஒருவர் புலவரென் றால் அவரைத் தெய்வமாகப் பாவித்து இராஜ சபையில் வரவேற்று, சன் மானம் செய்தும், இராஜாங்கப்புலவரென்னும் பெயர் கொடுத்து உபசரி தும் வர்தனர். இதற்கு உதாரணம், புகழேந்தி, கம்பர், ஒட்டக் கூத்தர் முதலியோர். இக்காலத்தில் இவர்கள் கவிகளைக்கேட்பவர் எந்தத் தமிழ் இராஜர்? அல்லது தற்கால கலாசாலைகளில் தமிழ்ப் பண்டிதர்களாக அமர்ந்திருக்கிறார்களே அவர்களெல்லாம் என்ன சன்மானம் பெறுகிறார் கள். அப்படியும் தமிழ் இரண்டாவது பாஷையாக (Second Language) அல்லவோ கருதப்படுகிறது. மாணவர்கள், தங்கள் ஆங்கில பண்டிதர் (English Professor) வருகிறார் என்று கேட்டவுடனே நடக்கிறது போல், தமிழ்ப் பண்டிதர் வருகிறார் என்று கேட்டால் அவ்வளவு மரியா

தையுடனும் ஊக்கத்துடனும் சரிவர நடந்துகொள்வதே யில்லை. இது நானே, வாசித்துக்கொண்டிருந்தபோது கண்ட காட்சி. இப்படியிருக்க நமது தமிழ்ப் பாஷை எப்படி முன்னுக்கு வரும்?

ஒருவன் முழு ஆங்கிலமும் கற்கவேண்டுவதில்லை. ஆனால் மெட்ரிகுலேஷன் பரீட்சை கொடுத்தாலும் எந்த ஆபீஸிலும் 20 ரூபாய் வருமான உத்தியோகத்தை யடைகிறான். அதிலிருந்து அவனுடைய அதிர்ஷ்டா அதிஷ்டத்தை யொட்டி முன்னுக்கு வந்து விடுகிறான். பெரிய உத்தியோகஸ்தர்களுக்குச் சற்று வாசிக்க அவகாசம் ஏற்பட்டாலும் ஏற்படுமே தவிர சிறிய உத்தியோக வாசிகளுக்கு அவகாசம் ஏற்படுவது மிகவும் துர்லபம். அவர்கள் சம்பாதிப்பது தங்கள் குடும்பங்களைப் போஷிக்க போதாதாகையால் வெவ்வேறு காரியார்த்தங்கள் செய்யவேண்டி வருகின்றன. ஆகையால் இவர்களுக்குத் தமிழ்படிக்க அவகாசமில்லை. அப்படிச் சிறிது ஏற்படின் பத்திரிகைகளின் மீது மனம் செல்லுகிறது. காலை முதல் சாயங்காலம் வரையில் வேலை செய்து வீட்டிற்கு வந்து, வீட்டிலும் சம்சார கஷ்டத்தில் கஷ்டப்பட்டு உட்கார்ந்திருக்கும்போதா தொல்காப்பிய முனிவர் செய்த தொல்காப்பியத்தை ஒருவன் வாசிக்கவிரும்புவான்! கடவுளைத்தான் நினைக்க வேண்டிவரும்.

இப்பொழுதுதான் நாம் "தமிழின்" க்ஷீணதிசையை யடையும் மூல காரணத்திற்கு வருகிறோம். முற்காலத்தில் கல்வி பயில்வது ஒரு குருவினிடத்திலே வசித்திருந்தே. அதைத்தான் "குருகுலவாசம்" என்பார். இப்போதோ பலகுருவாசம். மாணவர்களுக்கு ஏற்படுத்தியிருக்கும் பாட புத்தகங்களில் பத்தில் ஒன்றுதான் தமிழ்ப்பாட புத்தகமாம். அதுவும் வாரத்தில் இரண்டு விசைதான். ஒருவன் தன் பரீட்சைக்குப் படிக்கவேண்டிய புத்தகங்களுள் பத்தில் ஒன்பது இங்கிலீஷும், ஒன்று மாத்திரமே தமிழாயுமிருப்பதால் எது அபிவிருத்தியடையும் என்பது நமது "தமிழ்" க்ஷீணதிசையடைகிறது என்று வருத்தப்படும் நேயர்கள் அறியவேண்டிய முதன்மையான விஷயம்.

இப்படி மாணவரின் 14 வருட வித்தியாப்பியாசத்தில் 95 பங்கு இங்கிலீஷும், 5 பங்கு தமிழும், இருப்பதால், தமிழ் கூடிய சீக்கிரத்தில், 'தமிழ்' என்னும் பாஷையும் உண்டா என்று கருதும்படி ஏன் போய்விடக்கூடாது? ஆரம்பத்திலிருந்தே ஆங்கில விநோதக் கதைகள் வாசிக்கப்படுகின்றன. ஆங்கிலத்தில் தேறினால்தான் பரிட்சைக் கொடுக்கப்படும் என்கிறதினால் மாணவர்கள் அதை அதிக ஊக்கத்துடனும், ஜாக்கிரதையாயும் படிக்க வேண்டியதாகவிருக்கிறது. ஆங்கிலத்தில் தேறினால்தான் பரிட்சை கொடுக்கப்படும், என்பதை, கூட 'தமிழிலும்' தேறினால்தான் பரிட்சை கொடுக்கப்படும், என்று ஏன் ஏற்படுத்தக் கூடாது? இதை யார் ஏற்படுத்துகிறது என்று கேட்கலாம். இதற்கு விடைதான் மூலகாரணம். நமது சர்வ கலாசங்கத்தார்தாம் புஸ்தகங்களை ஏற்படுத்துகிறவர்கள். ஏன் அவர்கள் மேற்சொல்லியபடி கலாசாலைகளில் ஏற்படுத்தக்கூடாது? ஆங்கில உபாத்தியாயர்களுக்குக் கொடுக்கும் சன்மானம் ஏன் நம் தமிழ்ப் பண்டிதர்கட்குக் கொடுக்க ஏற்பாடு செய்யக்கூடாது? அப்படித் தமிழிற்கும், ஆங்கிலத்திற்கும் சமமரியாதை கொடுத்து, ஆங்கிலம் கற்றவனானாலும் சரி, தமிழ் கற்றவனா

ஞாலும் சரி அவனுக்குச் சம உத்தியோகம் துரைத்தனத்தாரால் அளிக்கப்படும் என்று விதி இருந்தால் நமது 'தமிழ்' சீர்கெட்டுப் போகுமா? நிலைகெட்டுத் தவிக்குமா? ஏறக்குறைய யாவரும், படிக்கும் நேரம்தவிர மற்றநேரங்களில் தமிழ்தானே பேசுகிறார்கள். ஆங்கிலத்தின் பெருமைக்குக் காரணம் யாதெனில், அது இராஜ பாஷையா யிருப்பதனாலும், கௌரவ உத்தியோகங்கள் அதினால் அடையப் படுவதாலும், வயிற்று பாஷையா யிருப்பதனாலும் அது உயர்வுற்றது. எப்படி ஒருவன் பணக்காரனானன் என்றால பலபேர் ஏழையானார்கள் என்பதுபோல் ஒரு பாஷை உன்னத திசையைத் தற்காலம் அடைந்திருக்கிறது என்றால் மறுபாஷை தாழ்ந்த திசையிலிருக்கிறது என்று உடனே ஊகிக்க வேண்டியதுதான்.

ஆரம்பக்கல்வியிலேயேபாலகர்களுக்குஆங்கிலத்தைப்பற்றி உயர்த்தியும், தமிழைத் தாழ்த்தியும், பாடபுத்தகங்களில் முக்காற் பங்கு இங்கிலீஷும், காற் பங்கு தமிழும் போதிப்பதனால், நாளாவூர்த்தியில் தமிழைப் பற்றிப் பாலகர்கட்குகௌரவமும் உற்சாகமும் ஏற்படாமல் தடைபட்டுப் போகின்றன. ஒருவன் ஒருவனையாசித்தவனா என்று கேட்டால் அவன் வாசித்தவன்தான் என்றுசொன்னால், அவன் ஆங்கிலம் வாசித்திருந்தால் தான் வாசித்தவன் என்று மெச்சிக்கொள்கிறான். தமிழ்மாத்திரம் படித்திருக்கிறேன் என்றால்அவ்வளவு திருப்திகரமாயில்லை. இதனாலேயேதமிழ்ப் படிப்பவர்க்குச் சற்றும் உற்சாக மில்லாமல் போகிறது. இப்படி யிருக்க எவ்விதம் தமிழ் விருத்தியடையும்?

இதனால் நம்மவர், நான் மேற்கூறியவற்றால் ஆங்கிலத்தை உயர்த்தியும் நம் தாய்ப்பாஷையாகிய தமிழைத்தாழ்த்தியும் கூறவந்ததாக முக்காலமும்நினைக்கவேண்டாம். அதைவிடக் கீழ்மைத்தனம்வேறேதேனும் உண்டோ. அது'உண்டவீட்டில் இரண்டகம் செய்ததை' யொக்கும். தமிழ்த் தேயத்தில்பிறந்து, வளர்ந்து, கற்று, பயன்களை அனுபவித்து, தமிழையே தாழ்த்திப்பேசவும், நாவருமோ! அந்தோ! அது தன் தாயை இழிவாய்ப் பேசினதை யல்லவோ வொக்கும்! நான் கூறியவை யாவும தற்காலம் எப்படி உள்ளபடி நடக்கிறதோ அதை எடுத்துக் கூறியுளேன். இத்தமிழின் பெருமையும், சீர்மையும், நவரசச் சிறப்பும், சொற்சுவை, பொருட்சுவை முதலிய அவயவங்களின் அமைப்பும், வேறெதிலும், இல்லையென்றும், ஸ்ரீமத்சாக்ஷாத் எம்பெருமான், மகா தபசியாள அகஸ்தியருக்கு உபதேசித்ததால் இது சிறந்த பாஷையென்றும், இதைப்போல் சுருங்கச் சொல்லி விளங்கவைத்தலாகிய பாஷை வேறெதுவும் இல்லை யென்றும் நான் முக்காலும் நிச்சயமாகக் கூறுகிறேன்.

அந்தோ! மேற்கூறிய மூலகாரணத்தினால், அதாவது, சர்வகலா சங்கத்தாரால் ஏற்படுத்தப்படும் பாடபுத்தகங்கள் கலாசாலைகளில் கொஞ்சமாயிருப்பதாலும், சமமரியாதை கொடுக்காதிருக்கிறதனாலும், இராஜாங்கத்தாரால் அங்கீகரிக்கப்படாததா யிருக்கிறபடியினாலேயும், நமது 'தமிழ்' இக்கதிக்கு வந்துவிட்டது.

ஆயினும் இன்னும் காலம் மிஞ்சிப் போகவில்லை. இப்பொழுது 1919 (Reform Act)ன் படிக்கு "கல்வி" என்பது நமது சுய அரசாட்சியில் ஒரு ஜாப்தா (Transferred Subject). நம்மவர்கள் கையில் கல்வியின் வளமையையும், சீர்மையையும் மாட்சிமை தங்கிய கவர்ன்மெண்டார் கொடுத்து விட்டபடியால்,

முதலாவது:—நம்மவர்கள் உழைத்துத் தமிழைத் தனதுபழைய நிலைமைக்குத் தூக்கிவிடுவார்களென்று வேண்டிக்கொள்ளுகிறேன்.

இரண்டாவது.—இப்பொழுது உலாவிவரும் தமிழ் சஞ்சிகைகளும், பத்திரிகைகளும் போதா. இவை ஆங்கில பத்திரிகைகளுக்கும், சஞ்சிகைகளுக்கும் சமமாக உலாவிவர வேண்டும். ஒவ்வொரு வீட்டிலும் ஒரு தமிழ்ச் சஞ்சிகையோ அல்லது பத்திரிகையோ இருக்கவேண்டும். நமது 'ஆனந்தன்' இதற்கு ஒரு உதாரணம்: நல்ல விஷயங்களை அடங்கியதாயும் விலை சரசமாயும் எளிய நடையில் எழுதப் பெற்றதாயும் உள்ள இத்தகைய ஒன்றை யாவரும் கையாடுவது அவசியம்.

மூன்றாவது.—கலாசாலைகளில் தமிழும், ஆங்கிலமும் சமமாக நடத்தப்படவேண்டும்.

நான்காவது:—இராஜாங்கத்தாரால் அங்கீகரிக்கப்பட வேண்டும்.

ஐந்தாவது:—கடவுளருளால் பேசசக்தி வாய்ந்தவர்கள் பேசி வரவேண்டும். நன்றாய் எழுதச் சக்தியுடையோர் எழுதி வரவேண்டும். பேசச் சக்தியுடையோர் பேசிவரவேண்டும்.

மேற்சொன்னபடி நடக்கும் பட்சத்தில் தமிழ் தனது பூர்வீக நிலைமையில் பாதியேனுமடையும்.

இகபரமிரண்டிலும் உயிருக்கு உயிராகி எங்கும் நிறைகின்ற அக்கருணாநிதி அருள் புரியாராக. சுபம்.

ம. அமிர்தலிங்கம்,
112, தம்புசெட்டி தெரு, மதராஸ்.

---

## தமிழின் பெருமையும், தற்கால நிலைமையும்

(194-ம் பக்கத் தொடர்ச்சி)

இத்தன்மையாக அநேக உதாரணங்களிருக்கின்றன. இவையெல்லாவற்றையும் சற்று ஆலோசிப்போமேயானால் இத்தமிழ் மொழியானது தெய்வத்தன்மையான மொழி என்பதிற் சற்றும் ஐயமில்லை. பீடுபெற்ற மொழி இஃதே:—

தமிழ்ப்பெருமை:—இத்தகையான தெய்வத்தன்மையுடைய இத்தமிழின் பெருமையு முரைக்க வேண்டுமோ! அவ்வாறுரைக்க வேண்டுமேயானால் அஃது ஆயிரம் நாவுடைய ஆதிசேடனாலும் முடியாததே—இருப்பினும் நான் ஒரு செய்யுளால் தெரிவிக்கிறேன்.

"கண்ணுதற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணுறத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணிடைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணிடைப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ"

என்றதனால் அது அறியலாகும். இவ்விரு நிலத்தில் எவ்வளவோ

மொழிகள் வழங்கி வருகின்றன. ஆரியம் தவிர மற்றப் பாடைகளுக்கு இலக்கணமாவது, சொற்பொருள் புத்தகமாவது செய்யுள்களாக வரையப் பட்டு எளிதில் உணரத்தரும்படிக் கில்லை. ஆனால், இத்தமிழுக்கு மாத் திரம் நிகண்டு என்றும், இலக்கணம் என்றும் யாப்புக்களாலணியப் பெற்றி ருத்தல் பெருமையன்றோ. ஆனது பற்றியே இம்மொழி பீடுபெற்றது. மற்றும் எம்மொழி உறக்கத்திற்கு வரினும் இதன் செயல் மட்டும் உற ங்காது. இதனை யுன்னியே,

“ நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் செழி லொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பாத கண்டமதில்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமு மதிற்சிறந்த திராவிடநற் றிருநாடும்.

அத்திலக வாசனைபோ லனைத்துலகு மின்பமுற
எத்திசையும் புகழ்மணக்க விருந்தபெருந் தமிழணங்கே
பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் னிருந்தபடி யிருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்குங் கவின்மலையா ளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல வாயிடினும்
ஆரியம்போ லுலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்தே செயல்மறந்து வாழ்த்துவமே”

என மனோன்மணியத்தில் கூறியதும் காண்க.

இம்மொழிக்கு எதாவது உவமை கூறலாமெனிலோ,

“ கடல்குடித்த குடமுனியுன் கரைகாணக் குருநாடில்
தொடுகடலை யுனக்குவமை சொல்லுவதும் புகழாமே
ஒருபிழைக்கா அரனார்முன் னுரையிழந்து விழிப்பாரேல்
ஆரியதுன திலக்கணமென் றறைவதுமற் புதமாமே
சதுமறையா ரியம்வருமுன் சகமுழுதும் நினதாயின்
முதுமொழிநீ யனாதியென மொழிகுவதும் வியப்பாமே
வேகவதிக் கெதிரேற விட்டதொரு சிற்றேடு
காலநதி நினைக்காவாக் காரணத்தி னறிகுறியே
கடையூழி வருந்தனிமை கழிக்கவன்றோ வம்பலத்துள்
உடையாருன் வாசகத்தில் ஒருபிரதி கருதுவதே
தக்கவழி விரிந்திலகுஞ் சங்கத்தார் சிறுபலகை
மிக்கநலஞ் சிறந்தவுன்றன் மெய்ச்சரித வியஞ்சனமே
வடமொழிதென் மொழியெனவே வந்தவிரு விழியவற்றுள்
கெடுவழக்குத் தொடர்பவரே கிழக்கொடுமேற் குணராமே
வீறுடைய கலைமகட்கு விழியிரண்டு மொழியானால்
கூறுவட மொழிவலமாக் கொள்வர்குண திசையறியார்
கலைமகடன் பூர்வதிசை காணுங்கால் அவள்விழியுன்
வலதுவிழி தென்மொழியாம் மதியாரோ மதியுடையார்
பத்துப்பாட் டாதிமனம் பற்றினார் பற்றுவரோ
எத்துணையும் பொருட்கிசையும் இலக்கணமில் கற்பனையே

வள்ளுவர்செய் திருக்குறளை மருவறநன் குணர்ந் தோர்கள்
உள்ளுவரோ மநுவாதி யொருகுலத்துக் கொருநீதி
மனங்கரைத்து மலங்கெடுக்கும் வாசகத்தின் 'மாண்டோர்கள்
கனஞ்சடை-யென் றுருவேற்றிக் கண்மூடிக் கதறுவரோ"

எனக் கூறப்பட்டிருத்தலால் எவ்வாறு கூறுவது.

ஆதலால் இதன் பெருமையை யான் சிறியன் மிகக் குறைவாகக் கூறியது காண்க. இனி நாம் இத்தன்மையான குணம் என்னையோ? இதனைப்படித்தவர்கள் எத்தன்மையாக விருப்பார்? என்பவற்றைப்பற்றி ஆலோசித்துப் பார்த்த லவசியம்.

இதன் குணம்.—தமிழ் என்னுமிப்பதத்திற்கே இனிமை, இன்பம், நீர்மை எனப்பொருளோதினேன். தமிழினது தெய்வத்தன்மையையும், பெருமையையும், நாட்டையுங் கூறினேன். இவற்றினாலேயே இதனது குணத்தை யறியலாகும்; மானிடர்களின் ஆசாரமும், நடையுடையு மறியலாகும். முதலாவது, இவர்கள் சாத்வீகத்தன்மை வாய்ந்தவர்கள்; அரச பக்தி, ஈசுவரபக்தியுடையவர்; செல்வவந்தர்கள்; கல்வி கேள்வியுடையார்கள்; பரோபகார சிந்தனை யுடையவர்கள்; புண்ணிய பாவமுண்டென்று கருதுவார்கள்; இன்சொல் வழங்குவோர்கள்; சங்கீத முணர்ந்தோர்கள்; இன்பமூட்டுந் தன்மையுடையவர்கள்; நல்லொழுக்கமுடையோர்கள், என்பது இந்நாட்டின்வாழும் மாந்தரைப் பற்றி விளங்கும். இவர்களது உணவோ? சாகபக்கணம். நாட்டைப்பற்றி ஆராயுங்காலத்து முப்போகம் விளையக் கூடியது, நல்ல தெய்வதா சாந்நித்தியம் நிரம்பிப் பல கோயில்களையுடையது என்பது விளங்குறும். இதனைப் படிப்போர்களுக்கு விளங்கும் நீதிகளுக்கோ அளவேயில்லை. இத்தகைமையாக நிறக்கச் செய்யும் இத்தமிழ்ச் சொல். இக்குணங்களைக்கண்டன்றோ ஈசுவரனுமிச்சொல்லைவிரும்பி இதன் பண்களால் பாவும் பக்தர்கட்குப் பரமபதமளிக்கிறான். இத்தன்மைய மொழியைத் துறந்து, இதையே நிந்தித்து ஆங்கிலம் கற்பது அநீதியன்றோ.

இதனுடன் சமபாடை.—இதனுடைய சிறப்புகளெல்லாம் அமையப்பெற்று, ஈசுவர சாந்நித்தியம்பெற்றுச் சமமான பாடை இந்நிலத்தின்கண் வேறு உளதோவெனில், நிதானித்து ஆராய்ச்சி செய்வோமேயானால் இதற்கு ஒப்புவமையாக ஒன்றுளது. அஃது வடசொல்லாகிய ஆரியமே. மற்றவைகளையெல்லாம் தமிழ்வென்று விட்டது என்பது திண்ணம்.

"மறைமுதற் கிளந்தவாயான் மதிமுகிழ் முடித்த வேணி
இறைவர்தம் பெயரை யொட்டி யிலக்கணம் செய்யப் பெற்றே
அறைகடல் வரைப்பில் பாடை யனைத்தும்வென் றாரியத்தோ
டுறழ்தமிழ்த் தெய்வந்தன்னை யுள்நினைந் தேத்தல் செய்வாம்"

(தொடரும்)

R. S. சாம்பசிவ சர்மன்,
தமிழ்த்தொண்டன்.

---

## நம் தாய்நாட்டின் சிறப்பு

(129-ம் பக்கத் தொடர்ச்சி.)

இந்துக்கள் பீஜகணிதத்தை மிக்க உன்னதமான நிலைக்கு விர்த்தி செய்திருந்தார்கள். அராப்பிய நூலாசிரியர்கள் இந்துக்களின் பீஜகணித சாத்திரங்களை எட்டாவது நூற்றாண்டில் மொழி பெயர்த்திருக்கிறார்கள். இடலியிலுள்ள பைஸா நகரவாசியாகிய லீனர்டோ (Leonardo) என்பவர் ஆராப்பியரிடமிருந்து அதைக் கற்றுக்கொண்டுபோய் ஐரோப்பாவில் பரவச் செய்தார். அமெரிகாவிலுள்ள இல்லினய்ஸ் (Illinois University) சர்வகலாசாலையைச் சேர்ந்த ஜாகப் கன்ட்ஸ் என்ற பண்டிதர் (Professor Jacol Kuntz) "இந்துக்கள் பீஜகணிதத்தில் இரண்டாந்தரம் மூன்றாந் தரத்தைச்சேர்ந்த ஒரு அறியாத் தொகையைக் கொண்டு (With one unknown quantity of the second and third degree) சமீகரணங்களை நிரூபித்துக் காட்டும் (Solve Equations). சக்திவாய்ந்தவர்களாக விருந்தார்கள்.

கோணசாத்திரம்(Geometry) இந்தியாவில்தான் முதல் முதல் கண்டு பிடிக்கப்பட்டது. நிர்ணயமான சட்டங்களிலிருந்து உற்பத்தியான இச் சாத்திரம் ஹிந்துக்களின் வேதங்களில் கூறப்பட்டபடி எந்திரங்கள், வேதிகைகள் முதலியவை யமைப்பதற்கு அவசியமாக விருந்தது. ஆர். ஸி. டட் (R. C. Dutt) என்ற பண்டிதர் தாம் எழுதிய "பூர்வீக இந்தியாவின் நாகரீக சரித்திரம்" என்ற புகழ்பெற்ற நூலில் ஹிந்துக்கள் கிருஸ்து பிறக்குமுன் எட்டாவது நூற்றாண்டில் (சுமார் 2700 வருடங்கட்கு முன்) கோணசாத்திரத்தைப் பற்றிய முதல் சட்டங்களைக் கண்டுபிடித்து அதை கிரேக்கருக்கு உபதேசித்தார்கள்" என்று கூறுகிறார்.

திரிகோண சாத்திரத்தின் பூர்வீக ஆசிரியர்களும் ஹிந்துக்களே என்று நம்புதற்குக் காரணமிருக்கிறது.

இந்தியா இன்னும் மற்ற சாத்திரங்களிலும் உலகத்திற்கு உதவிபுரிந்திருக்கிறது. சங்கீத சாத்திரத்தை எடுத்துக்கொள்வோம்: சங்கீதம் இந்தியாவில் மிக்க புராதனமானது. ஐரோபா சங்கீதத்தைவிட இந்திய சங்கீதம் மிக்க பழமையானது. இந்தியாவில் சங்கீதம் மூவாயிர வருடங்களுக்கு முன் இருந்து விர்த்தியடைந்து வருகிறது. மேல்நாட்டார் செவிகட்கு இந்தியசங்கீதம் புதிய நாதமாகவே தோன்றும்; ஆனால் பழகப்பழக அதில் விருப்பமதிகரிக்கும். இந்துக்கள் மனவெழுச்சியா லுண்டாகும் நாதத்தை முப்பத்திரண்டு விதங்களாகப் பிரித்திருக்கிறார்கள். அவற்றில் ஒவ்வொன்றுக்கும் ஒருவரிசை இராகங்களும், இராகினிகளும் ஏற்படுத்தி யிருக்கிறார்கள்.

சிற்ப சாத்திரத்தைக் கவனியுங்கள், ஐம்பது வருடத்திற்குக் கொஞ்ச காலத்திற்கு முன்பு வரையில் சுரங்கவழி துளைக்கும் தொழில் மேல்நாட்டார்க்குத் தெரியாது. இந்தியருக்குப் பூர்வகாலத்தி லிருந்தே அது தெரியும். எல்லோராவிலுள்ள கல்மலைக்குள் ஒன்றரை மைல் நீளத்திற்குக் குடைந்து செதுக்கப்பட்டிருக்கும் கோயில்கள் இந்துக்களின் அபாரமான சிற்ப சாத்திர சாமார்த்தியத்தைக் காட்டும் பிரம்மாண்டமான அத்தாட்சியாக இன்றும் இருக்கின்றன.

இன்னும் அமெரிகாவிலாவது, ஐரோபாவிலாவது அறுபது வருடங்களுக்குமுன் எந்தத் தொழிற் சாலையும் உற்பத்திசெய்ய முடியாத வார்ப்பட இருப்புத் தூண்கள் புராதன இந்தியாவில் செய்யப்பட்டிருக்கின்றன. இந்தியாவிலுள்ள இராஜதேவத் தூண் இதற்குத் தக்க அத்தாட்சியாக இன்னும் நின்றுகொண்டிருக்கிறது. இது, இப்போதிருக்கும் ஒரு யுத்தக் கப்பலின் குறுக்குச் சுற்றளவுக்குச் சமமான பருமனுடையதாக விருக்கிறது; இது மட்டுமல்ல. இது ஆயிரத்தறுநூறு (1,600) வருடங்களாக வெயில், மழை, காற்று இவற்றால் தாக்கப்பட்டுக்கொண்டிருப்பினும் துரு பிடிக்காமலே யிருக்கிறது. இதனால் இரும்பைத் துருப்பிடிக்காதபடி செய்யும் சாத்திரம் இந்துக்களுக்குத் தெரிந்திருக்கிறதென்று நிரூபகமாகிறது. இக்கால உலகத்திற்கு இது இன்னும் தெரியாது.

வைத்திய சாத்திரத்தில் இந்துக்கள் மிக்க பூர்வீக காலத்திலேயே பிரசித்தமான பாண்டித்தியம் பெற்றிருந்தார்கள். வைத்தியத்திற்குத் தாயகமெனச் சாதாரணமாக மதிக்கப்பட்ட ஹிப்போக்ரேட்ஸ் (Hippocrates) என்பவர் ஔஷத பதார்த்த தத்துவ சாத்திரத்தை(Materia Medica) இந்துக்களிடமிருந்து பெற்றுக்கொண்டாரென்று தற்கால ஆராய்ச்சியால் விளங்குகிறது. நான்காவது நூற்றாண்டில், கிரேக்கர் இந்தியாவிற்கு வந்திருந்தபோது கிரேக்க வைத்தியர்கள் நிவர்த்தி செய்யக்கூடாத வியாதிகளை இந்து வைத்தியர்கள் தீர்த்துவிடும் சக்தியுடையவர்களாக இருப்பதை யறிந்து, மகா அலக்ஸாண்டர் தமது பாளையத்தில் இந்து வைத்தியர்களை வைத்துக்கொண்டிருந்தார். இலண்டன்மா நகரிலுள்ள பிரசித்தி பெற்ற டாக்டர் ராயில் (Dr. Royle) என்பவர் எழுதிய "இந்து வைத்தியம்" என்ற நேர்த்தியான நூலில் "ஔஷதங்களின் முதல் முறைகளை இந்துக்களிடமிருந்து அறிந்துகொண்டிருக்கிறோம்" என்று கூறியுள்ளார்.

நாகரீகம் என்பதும் முன்னேற்ற மென்பதும் ஒன்றாய்ச் சம்பந்தப்பட்ட பெயர்களே. இந்துக்கள் நாகரீகத்தில் உயர்ந்த நிலைமையை யடைந்திருந்தார்கள் என்பது பல அத்தாட்சிகளால் வெளியாகின்றது. மானிட தேகத்தின் உள் அங்கங்களின் திட்டமான அமைப்பைப் பற்றிய சாத்திரம் இந்துக்களுக்கு கிருஸ்து பிறக்க அறுநூறு வருடங்களுக்கு முன்பே தெரியும். அங்கச்சேதசிகிச்சையை (Surgery) இந்துக்கள் கிருஸ்து பிறந்த காலமுதலே கையாடிவருகிறார்கள். உலகில் முதல் முதல் கட்டப்பட்ட வைத்தியசாலைகள் (Hospitals) இந்து தர்மிஷ்டர்களாலும் இந்துசாஸ்திர பண்டிதர்களாலுமே கட்டப்பட்டன. பாரஸெல்ஸஸுக்கு (Paracelsus) முன்பே இந்தியாவில் துத்தநாகம் கண்டுபிடிக்கப்பட்டது. இரத்தவோட்டத்தைப்பற்றிய விஷயங்கள் ஹார்வேயின் (Harve) காலத்திற்குமுன்பே இந்தியருக்குத் தெரிந்திருந்தது.

இந்துக்கள் மறுமை விஷயத்தைப்பற்றி மட்டுமே கனவுகண்டுகொண்டிருக்கிறவர்களல்ல. உலக விவகாரங்களின் அபிவிர்த்தி விஷயத்திலும் அவர்கள் நல்ல அனுபவமுடையவர்களே. ஆங்கிலதுரைத்தனம் இந்தியாவில் தாபிக்கப்படும் காலம்வரையில் இந்தியாவில் துரைத்தனமுறைமையைப்பற்றிய சட்டங்களும், ஸ்தாபனங்களும் இருந்திருக்கின்றன. இந்திய சரித்திரங்களையும் இந்தியரின் இராஜாங்க முறைமையைப் பற்றிய எண்

ணங்களையும் சாத்திர யுக்தமாகச் சாக்கிரதையோடு கவனித்துப்பார்த்தால், பிரதிநிதிகளை ஏற்படுத்தி துரைத்தனம் நடத்து முறைகளும், குடியரசு முறமைகளும் இந்துக்கள் அறியாதனவல்ல வென்பது ஐயமறவிளங்கும்.

அரசன் ஒருவரும் எதிரில்லாத தன்னரசா யாளும் துரைத்தனமே இந்தியருக்குத் தெரிந்த துரைத்தனம் என்று மேல்நாடுகளில் அடிக்கடி கருதப்படுகிறது. அத்தகைய அபிப்பிராயம் தவறுனது. இந்தியாவில் அரசனுடைய அதிகாரம் வரம்பில்லாததல்ல; அவன் அதிகாரத்திற்கு அனேக நியமங்களுண்டு. அரசன் தன்னரசுக் காரனல்ல; அரசனுடைய செய்கைகள் பிரதான மந்திரிகள் முதலியவர்களின் அங்கீகாரத்திற்கும், தேசாசாரத்திற்கும், சட்டத்திற்கும், பொதுஜன அபிப்பிராயத்திற்கும் கட்டுப்பட்டவைகளே. தன் மந்திரிமார்களின் ஆலோசனையை யங்கீகரிக்காவிட்டால், அந்த அரசன் கொடுங்கோலரசன் என்று குற்றம் சாட்டப்படுவான். கொடுங்கோன்மைக்குத் தண்டனை கடினமானதே. சிம்மாதனத்தினின்று நீக்கப்படுவதுகூட அதற்குத் தண்டனையாகும். மநுவே இத்தகைய விதிகளை யேற்படுத்தி யிருக்கிறுர்.

இராஜநீதி நிபுணரும், ஞானியுமாகிய சுக்ரன், அரசனுடைய பதவி சிரேஷ்டமானதேயென்று ஒப்பப் பிரியமுடையவரே. ஆனுல், அவர் ஒரு மனிதனுக்கும், இன்னொரு மனிதனுக்கும் பிரதானமான வித்தியாசம் இல்லையென்பதை மனதில் உறுத்தும்படி கூறுகிறுர். மனிதன் என்கிற விஷயத்தில் அரசனிடம் மட்டும் விசேஷ பரிசுத்தத்வம் ஒன்றுமில்லை. அவன் மூலாதாரமான விஷயத்தில் மற்ற மனிதரைவிட மேலானவனுமல்ல, குறைந்தவனுமல்ல. "அரசனுடைய இரதத்தில் ஆரோகணித்துக் கொண்டிருக்கும் நாய்கூட அரசனைப்போல் காணவில்லையோ? கவிவானுல் அரசன் ஒரு நாய்க்குச் சமதையானவனென்று கருதப்படுவது நியாயந்தானே?" என்று அவர் வினவுகிறுர்.

ஒரு உத்தியோகஸ்தன் நூறுபேரால் குற்றம் சாட்டப்பட்டால் அவனை அரசன் உத்தியோகத்தி லிருந்து நீக்கிவிடவேண்டும் என்று சுக்ரன் கூறுகிறுர். அக்கிரமமான துரைத்தன உத்தியோகஸ்தரிடமிருந்து ஜனங்களின் நன்மைகளையும் சுதந்தரங்களையும் காப்பாற்ற இந்துக்கள் அக்காலத்திலேயே எத்தகைய ஆயுதங்களை ஏற்படுத்தி யிருக்கிறுர்கள் என்பது இதனுல் நன்குவிளங்குவது குறிப்பிடத்தக்கது. (தொடரும்)

ஓர் இந்தியன்.

---

## சில விநோத விஷயங்கள்

1. கொசுவுக்கும் மஞ்சள் நிறத்துக்கும் பொருத்தமில்லையாம். அது மஞ்சள் வர்ணமுள்ள துணிகள் பக்கத்தில் நின்ருேடுமாம். ஆனதால் படுக்கையறையை மஞ்சள்நிறமான திரையால் மறைத்தும் மஞ்சள் நிறமான வஸ்திரத்தால் தேகத்தை மூடிப்படுத்தும் கொசுக்களை விரட்டி விடலாமாம். கொசுக்கள் பாதை அதி சாதாரண மானதாலும் அதிலிருந்து பிணிகள் வளருவதாலும் மேற் சொன்ன லகுவழியை எல்லாரும் சோதனை செய்யவேண்டியது அவசியம்.

2. கண்ணுக்குத் தென்படாத சிறு ஜீவப்பிராணிகள் தண்ணீரிலும் தின்பண்டங்களிலும் சேருகின்றன. ஆகாராதிகள் அதனால் மலினப் பட்டுச் சாப்பிடுகிறவர்களுக்கு அநேகாயிரம் உபாதிகளை விளைவிப்ப துண் டல்லவா. இம்மாதிரி ஜந்துக்கள் பாலில் பிரவேசித்தல் மிகவும் எளிது; அதைத் தடுப்பதற்குத்தான் நாம் பாலைக் காய்ச்சுவது. ஆனால் அனே கம்பேர் பாலைச் சுட வைக்கிறார்களே தவிர நன்றாய்க் காய்ச்சுவதில்லை. அப்படிச் செய்வதில் விசேஷ குணமில்லை. ஐந்துநிமிஷ நேரமாவது பால் நன்றாய்க் கொதித்துப் பொங்காவிட்டால் அந்தப் பாலை விஷ ஜந் துக்களுக்குக் கொடுக்க சக்தியுண்டு. ஐந்து நிமிஷம் நன்றாய்ப் பொங்கின பாலைக் குளிர்ந்த பிறகு கூட அவைகளால் கெடுக்க முடியாது.

3. புகையிலை இக்காலத்தில் நம் நாட்டில் சர்வ சாதாரணமான வஸ்து. அதில்லாமல் உயிரை வைத்திருப்பது கூட வெகு பேருக்கு வரு த்தமாகவிருக்கிறது. இந்தத் திவ்ய பொக்கிஷம் முதல் முதலாய் இந்து தேசத்துக்கு வந்தது அக்பர் (Akbar) மஹா சக்ரவர்த்தியினுடைய அந்திய காலத்திலென்று தெரிகிறது. கி.பி. 1604 அல்லது 1605-ம் வருஷத்தில் ஒரு மேல்நாட்டு வர்த்தகன் புகையிலையை இங்கே கொண்டுவந்ததாக, வின்ஸென்ட் ஸ்மித் என்ற பிரசித்த சரித்திராசிரியர் சென்ற வருஷத் தில் எழுதின ஒரு புத்தகத்தில் நிரூபித்திருக்கிறார்.

4. உலகத்தில் நடக்கக்கூடிய கெட்ட காரியங்களெல்லாவற்றிலும் மிகக் கொடியவைகளை நாம் பஞ்சமகாபாதகங்கள், அதாவது ஐந்து பெரும் பாவங்களாகப் பிரித்திருக்கிறோம். மேல்நாட்டார் கொள்கைப்படி எழு மஹா பாபங்கள் உண்டு. அவற்றை ஸப்த மஹா பாதகங்கள் (Seven Deadly Sins) என்று சொல்லுகிறார்கள். அவை கர்வம் (Pride) பேராசை (Covetousness), காமம (Lust), போஜனப்பிரியம் (Gluttony), கோபம் (Anger), பொறாமை (Envy), சோம்பல் (Sloth) என்பவைகளே.

5. நாகரீகம் அதிகப்பட அதிகப்பட பெண்களுடைய அலங்காரங் களும் ஆபரணங்களும் அதிகப்பட்டுக்கொண்டே வருகின்றன. பெண் வடிவில்தான் சகல லக்ஷணங்களும் குடிகொண்டிருப்பதாக நம்முடைய எண்ணம். நாகரீக மணிகளுடைய அழகை வர்ணனை பண்ணுவதுதான் மஹா கவிகளுடைய முக்கிய கவலை. கவனித்து ஆராய்ந்தால் இது சுத்த மாக இயற்கைக்கு விரோதமென்று புலப்படும். இயற்கையில் பட்ட இதர ஜந்து ஜாலங்களில் எதைப் பார்த்தபோதிலும் ஆண் பெண்ணைவிடப் பதின்மடங்குக்குமேல் அழகாய்க் காணப்படும் என்பதற்குச் சந்தேக மில்லை. ஆண் மிருகங்களையும், ஆண் பறவைகளையும் பார்த்துத்தான் அதனதன் பெண்பால்கள் அதிசயமும் மோகமும் அடையுமென்பது நம க்கு உதாரணங்களால் தெளிவாய்த் தெரிகிறது. சிங்கம், புலி, மான், மயில், கோழி முதலிய பிராணிகள் எல்லாவற்றிலும் பெண்பாலைவிட ஆணுக்கு எவ்வளவோ அதிகம் லக்ஷணம் இருக்கிறதென்பது நிச்சயமல்ல வா; நாகரீகத்தில் மிகக் குறைந்த அமெரிக இந்தியர் (American Indian). காப்பிரிகள் (Kaffir) முதலிய ஜாதிகளில் ஆபரணங்கள் அணிவதும் அலங்காரம் செய்துகொள்வதும் புருஷர்களே. இந்த விஷயத்தில் நாக

ரீக ஜாதிகளுக்கும், மற்ற ஜீவ சிருஷ்டிக்கும் என் இந்த வித்தியாசம்? இதுவரையில் ஆராய்ச்சி செய்துவந்திருக்கும் மஹா வித்வான்களாலும் இதைச் சொல்ல முடியவில்லை.

6 அரசர்கள் நடவடிக்கை எப்போதும் விசித்திரம்தான். அவர்கள் மனம் போகிற போக்கிலேயே அஞ்சாமல் செல்வார்கள். ஒரு நூற்றாண்டுக்கு முன் இங்கிலாண்டு தேசத்தை ஆண்டுவந்த நாலாவது ஜார்ஜ் அரசர் (George IV) ஒருநாள் வின்ஸர் மந்திரத்தில் Windsor Castle) பெரிய விருந்து நடத்தினார். அவ்விருந்துக்கு மஹாராஜாவுடைய விசேஷ வேண்டுகோளின் பேரில் அழைக்கப்பட்ட விருந்தாளிகளில் அக்கிராசனம் வகித்தது. ஒரு வானரசிரோமணி. ஆப்பிரிக்கா தேசத்தில் (Africa) வீரத்துக்கும் தீரத்துக்கும் ஜகப்பிரசித்தி பெற்ற மாண்ட்ரில் (Mandril) என்றொருவகை பெரிய குரங்குகளுண்டு. அவ்விதக் குரர்களில் ஒருவரை ஸர்ரேமி ருகக்காக்ஷியில் (Surrev Zoological Gardena) வைத்துக்கொண்டிருந்தார்கள். அவர்தான் ஜார்ஜ் ராஜாவின் பிரதம அதிதியா யிருந்தது.

7. நம் தேசசரித்திர நூல்களில் மிகமேலானவை பிரசித்த ஆங்கில துரைகள் எழுதிய புத்தகங்கள்தான் என்று அநேகர் நம்புகிறார்கள். இந்து தேசசரித்திர நூலாசிரியர்களில் பிரமுகரும், மகம்மதிய அரசாட்சிகாலத்து (Muslim i erson) சரித்திர நிபுணரும், இந்த நாட்டில் அனேக விடங்களில் பெரிய பெரிய உத்தியோகம் வகித்திருந்தவரும் ஆனதின்துரை (Keene) அவருடைய பெரிய சரித்திர கிரந்தத்தின் முதல் அத்தியாயத்தில் துங்கபத்திராநதி கிழக்குத் தொடர்ச்சி மலையிலிருந்து (The Eastern Ghats) புறப்படுவதாக வெகு துலக்கமாக வெளியிட்டிருக்கிறார். ஒருவேளை மேற்குத் தொடர்ச்சி மலையிலேறி முடிகிறதென்று நினைத்திருப்பார்போலும். இது ஆருக்குத்தெரியும். இன்னொருவர் இந்திய தேசத்திலிருக்கும் ப்ரெஞ்சு ராஜதானியின் (French Dominions) சரித்திரத்தில் மிகத் தேர்ந்தவர்; அவர்பெயர் மாலிஸன் (Mallison) அவருடைய ட்யூப்ளே (Dupliex) ஜீவசரித்திரத்தில்முதல் அதிகாரத்தில் புதுச்சேரி(P ndicherry), கொள்ளிடத்துக்குச் சிறிது தூரம் தெற்கு என்று அழுத்தமாய் எழுதுகிறார். இன்னும் உயிர் வாழ்ந்துகொண்டிருப்பவரும் நம் தேக சரித்திரகர்த்தாக்களில் அக்ரகண்யருமான வின்ஸெண்ட் எ. ஸ்மித் (Vincent. A. Smitn), சமீபகாலத்தில் பிழைதிருத்திப் பிரசுரம் செய்த அவர் புத்தகத்தில் பர்மார்நேரி, மாங்குடி, சத்தியமங்கலம் முதலிய கிராமங்கள் மலையாளக் கரையிலிருப்பதாக வாதிக்கிறார். பூகோளசாத்திர புத்தகங்கள் வண்டிக் கணக்காயிருக்கும்போது கண்ணால் கண்டறியக்கூடிய பிரதேசங்களின் திக்கும் திசையும் இவ்வளவு நுட்பமாகத் தெரிந்துகொண்டிருக்கிற பண்டிதர்கள், மனோதர்மத்தால் அனுமானித் தெழுதவேண்டிய சரித்திரங்களின் கதியென்ன? ஆனால் நம் தேசத்து நூலாசிரியர்கள் மேல் காணப்பட்ட துரைகளுடைய குருட்டு வழி நடப்பது கௌரவம் என்றெண்ணவேண்டியதே யில்லை. ஜில்லா பூகோளங்கள் எழுதுகிற பேர்களில் சிலர் அவர்கள் விவரிக்க ஜில்லாக்களைப் பார்த்திருப்பதே யில்லையென்று நிச்சயமாகச் சொல்லலாம். சில நாள்களுக்குமுன் வெளியான பூகோள புத்தகமொன்றில் திருநெல்வேலி ஜில்லாவிலோடும் தாம்

பிரபரணி நதியானது குற்றாலத்தில் உற்பத்தியாகிறதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இது எவ்வளவு வியப்பான விசேஷம்!

8. இடலி தேசத்தில் (Italy) 188: வருஷம் ஜூலை மாதம் மிலான் யூனியன் கோவாபரடிவ் (Union Co-operative of Milan) என்ற பேரோடு ஒரு கூட்டுத் தொழில் கடை (Co-operative Store) ஏற்படுத்தப்பட்டது. ஆரம்பத்தில் அதன் அங்கத்தார்கள் 134 பேர். முதல் வைத்தது, சுமார் ரூ. 1,800 (£ 85)) விற்பனை சாமான், நெக்டையும் காலரும் மாத்திரம். இது நாளுக்குநாள் விருத்தியாகி, இப்போது அதே சங்கத்தில், பங்காளிகள் அனேகாயிரம்பேர்கள்; அது செய்யும் வியாபாரம் அளவற்றது. குடித்தனத்துக்கு என்ன சுகங்களெல்லாம் வேண்டுமோ அவையெல்லாம் அந்த சங்கக்காரர்கள் கிரய விக்கிரயம் செய்கிறார்கள். 1915ஆ அதற்குவந்த லாபம் மாத்திரமே சுமார் பதினாலு லக்ஷம் ரூபாய். (£ 93,000). இப்போது நடந்த ஜெர்மன் சண்டையால் அந்தச் சங்கத்துக்கு விசேஷ நஷ்டம் கிடையாது. இதனால் கோவாபரடிவ் சங்கங்களால் எவ்வளவு காரியங்கள் சாதிக்க முடியுமென்று தெரிகிறது.

P. ஆனந்தநாராயணன்.

---

## கைவல்ய நவநீத வசனம்.

(173-வது பக்கத்தொடர்ச்சி)

[இதுகாறும் கூறியவற்றால் சீடன்கேட்ட இரண்டு சங்கைகளில் "பிரம்மம் வாக்கிற்கெட்டும், வாக்கிற்கெட்டாது" என்ற முதற்சங்கைக்கு உத்தரம் கூறப்பட்டது. இனிப் பிரம்மம் "மனதிற்கெட்டும், மனதிற்கெட்டாது" என்ற இரண்டாவது சங்கையைப்பற்றிக் கூறப்படுகிறது.]

முந்திய சங்கையை நிவர்த்தி செய்த ஆசான் சீடனைக் கிருபையோடு நோக்கி, "மைந்தனே! நாம் முதற்சங்கையைப்பற்றிக் கூறிய விஷயத்தை யுணர்ந்துகொண்டா யல்லவா; இனி இரண்டாவது சங்கையாகிய "பிரம்மம் மனதிற்கெட்டும், பிரம்மம் மனதிற்கெட்டாது" என்பதிலுள்ள சங்கையைப்பற்றிக் கூறுகிறோம் கேட்பாயாக.

இந்திரியங்களைத் தொழில் செய்யவைக்கும் அரசன் அந்தக்கரணமேயாகும். இந்த அந்தக்கரண விர்த்திகள் புத்திரூபமாகவும் மனோரூபமாகவும் வெளியிலும் உள்ளும் சஞ்சரித்தாடும். புத்திரூபமான அந்தக்கரணம் சொச்ச பதார்த்தம். அதாவது, கண்ணாடிபோல் பிரதிபிம்ப யோக்கியமானது. கண்ணாடியைப் பார்த்தால் நமது முகம்போல் அதற்குள் இன்னொருமுகம் தோன்றுகிறது. அதுபோல் புத்திரூபமான அந்தக்கரணத்தில் சித்ரூபனான கூடஸ்தனுடைய சாயை பிரதிபலிக்கும். இதற்கு ஆபாசன் என்றுபெயர். உன் மனோவிருத்தி அந்தச் சாயையின் வழியாகச் சஞ்சரிக்கும்; அதாவது விஷயங்களோடு சம்பந்திக்கும். இந்தச் சுத்தமான சத்துவ மனோவிர்த்தியே ஞானம் என்று கூறப்படுவது. [இது நுண்ணறிவால் ஊன்றி யுணரத்தக்கது.]

உருக்கிய வெண்கலமானது பலவித அச்சுகளில் ஊற்றப்பட்ட போது அந்தந்த அச்சின் உருவத்தை யடைகிறது. அதுபோல் ஆபாச சகித அந்தக்கரண விருத்தி இந்திரியவாயிலாக வெளிச்சென்றபோது, அந்தக்கரண விர்த்தியாகியபாகம் வெளியிலுள்ள கடபடாதி விஷயங்களின் ஆவரணத்தைப் (மறைப்பைப்) பங்கம் செய்கிறது. அதாவது, விஷய சமானாகாரமாய்ப் பரிணமிக்கிறது. ஆபாசன் என்ற பாகம் இது கடம், இது படம் என்று விளக்கி வைக்கிறது.

இருட்டிலுள்ள ஒரு பொருளைக் காணத் தீபமும் கண்ணும் ஆகிய இரண்டும் வேண்டும். அதைப்போல் உலகிலுள்ள ஜட பதார்த்தங்களைக் காண மேற்கண்டபடி மனோவிர்த்தியும் சிதாபாசனாகிய பலமும் வேண்டும். ஆனால் பிரகாசித்துக்கொண்டிருக்கும் சூரியனைக்காண விளக்கு வேண்டியதில்லை; கண்மட்டுமே போதும். அதுபோல், சித்தாகிய மெய்ப்பொருளைக்காண அந்தக் கரண விருத்தியொன்றே போதும். சிதாபாசனென்னும் பலம் வேண்டுவதில்லை.

இப்போது மனம் என்பதில் விருத்தி என்ற பாகமும், பலம் என்ற ஒரு பாகமும் ஆக இரண்டு பாகங்களுளவென நன்கு உணரலாகும். விருத்தி, பலம் ஆகிய இரண்டும் கூடியே மனம் என்பதாகிறது. ஜடமான உலகப் பொருள்களைக் காண மனதின் இரண்டு பாகங்களும் வேண்டும் என்றும், சித்தாகிய வஸ்துவைக்காண விர்த்திமட்டுமே போதுமென்றும் மேலே கூறினோம். அதாவது பிரம்மம் மனதின் விருத்தி என்ற பாகத்திற்குமட்டுமே எட்டும்; பலம் என்ற பாகத்திற்கெட்டாது.

இதனாற்றான் 'பிரம்மம் மனத்திற்கெட்டும், பிரம்மம் மனத்திற்கெட்டாது' என்று கூறியது. இதன் அருத்தம் இவ்வாறென்றுணர்ந்து உனக்குண்டான ஐயங்களொழிந்து தெளிவடைவாயாக." என்று கூறினார்.

[மேல்கூறப்பட்ட விஷயங்களிலிருந்து ஜீவன் என்பது என்னவென்றறியச் சந்தர்ப்பமிருக்கிறது. அந்தக் கரணம் சத்துவகுண காரியமாதலின் சொச்சம். அதில் சாக்ஷியாகிய கூடஸ்தனுடைய சாயை பதிகிறது. அச்சாயையே ஜீவன். அதாவது கூடஸ்தன் + சாயை + அந்தக் கரணம், மூன்றும் சேர்ந்ததே ஜீவன் எனவேண்டும்.

குளத்து நீரில், ஆகாயத்தில் பிரகாசிக்கும் சந்திரனுடைய பிரதிபிம்பம் தோன்றுகிறது. பிரதிபிம்பம் என்பது தோன்ற இரண்டு வஸ்துக்கள் அவசியம் வேண்டும். முதலாவது, மூலகாரணமான ஒருவஸ்து வேண்டும். அதுநமது முகமே என்றுவைத்துக்கொள்வோம். இதற்கு அதிட்டானம் என்று பெயர். இரண்டாவது, பிரதிபிம்ப யோக்கியமான ஒரு வஸ்து வேண்டும்; அதுவே கண்ணாடி. . இவை யிரண்டும் சேர்ந்தபோது கண்ணாடியில் நமது முகத்தைப்போல் தோன்றும் சாயலே பிரதிபிம்பம் எனப்படுவது. முதல் இரண்டில் ஒன்றின்றேல் பிரதிபிம்பம் இன்றாம். இதுபோலவே குளத்து ஜலத்தில் தோன்றும் சந்திரனுடைய பிரதிபிம்பமும். அதிட்டான சந்திரனும் ஜலமும் இன்றி ஆபாச சந்திரனில்லை. இதைப்போலவே அந்தக்கரணத்தில் பிரதிபலித்த ஆன்மாவாகிய கூடஸ்தனது சாயையே ஜீவன்.

குளத்து ஜலம் அசைந்தால் ஆபாசசந்திரன் அசைவதுபோல் காணப் படுகிறது. அதிட்டான சந்திரனுக்கோ அசைவே யில்லை. இந்த ஆபாச சந்திரன், அதிட்டான சந்திரனே நாம் என்பதை மறந்து, தன்னை வேறாகக் கருதிக்கொண்டு, ஜலம் அசைவதைத் தான் அசைந்து அலைவதுபோல் கருதிக்கொண்டால் எப்படியிருக்குமோ, அப்படியே யிருக்கிறது ஜீவனுடைய தன்மை. ஜீவன் தான் அதிட்டானமாகிய கூடஸ்தன் என்பதை மறந்து தான் ஜீவனென்றும், மனம் இயங்குவது ஆபாசனாகிய தன் சக்தியால் தான் என்பதைக் கவனியாது, மனம் தன்னையன்றி வேறொரு பொருள் என்றும், அதன் தொழில்களெல்லாம் தன் தொழில்களென்றும் மயங்கியிருக்கிறது.

இச்சீவன் தான் அதிஷ்டானமாகிய கூடஸ்தனையன்றி வேறாக இல்லையென்பதை நினைத்துக் கூடஸ்தனாகிய சாட்சியாகவே நின்று, இதுகாறும் நம்மை யாட்டிக் கொண்டிருந்ததாய் நாம் மயங்கியிருந்த மனம் எங்கே யென்று தேடிப்பார்த்தால், அப்போது மனதின் உண்மை வெளிப் படும். அதாவது,

"உனக்குள் இருக்கும் நான் என்பதைக்கொண்டு மனம் எங்கேயிருக்கிறதென்று பார்த்தால் மனம் காணப்படாது. மனம் என்பதைக்கொண்டு நான் என்பதைப்பார்! அப்போதும் நான் என்பது தோன்றியதே மனம் என்பது இல்லாமற்போம்" என்று ஆன்றோர் கூறிய அனுபவம் உண்மையெனவிளங்கும்.

ஏககாலத்தில் நான் என்பதையும், மனம் என்பதையும் காணமுடியாது. இதனால் இவையிரண்டில் ஒன்றே உண்மையிலுள்ளது என்று தெரிகிறது. அதோடு இருவித சோதனையிலும் நான் என்பதே உள்ளதாகவும் மனம் என்பது இல்லாததாகவும் போகிறபடியால், நான் என்பதே மனம் தோன்றுவதற்கும் காரணமாக விருக்கிறது என்று 'அங்கை நெல்லிபோல்' விளங்கும். இது விகங்கமார்க்கமாக மனோலயமடைவதற்கு நேர் வழியாகும். ஆனால் இது கஷ்ட சாத்தியமான மார்க்கம். இச் சந்தர்ப்பத்தில் மெய்ஞ்ஞான சொரூபியாகிய தாயுமான சுவாமிகள் மனதை நோக்கி "நின்ஜன்மம் தேயத்தில் நீ செல்லல் வேண்டும்" என்று கூறியது சிந்திக்கத்தக்கது.]

(இனிச் சதா அலைந்துகொண்டிருக்கும் சுபாவத்தையுடைய மனதையெவ்வாறடக்குவது என்பதைப்பற்றிக் கூறப்படுகிறது.)

சீடன்:—"சுவாமி! 'பிரம்மம் மனோவாக்குகளுக்கு எட்டும் எட்டாது' என்றவற்றில் அடியேனுக் குதித்த சந்தேகங்கள் நிவர்த்தியாதற்பொருட்டு, தாங்கள் அருளிய காரணங்களையெல்லாம் நன்குணர்ந்தேன். ஆயினும் அடியேன் கூறிக்கொள்ள விரும்பும் விண்ணப்பம் இன்னும் ஒன்றுளது. தயை புரிந்து அதைச் செவியேற்றருளப் பிரார்த்திக்கிறேன். மனமானது சற்றும் சலனமடையாது அலையற்ற சாகரம்போலவும் நிவாத தீபம் (காற்றில் சலிக்காது நிற்கும் தீபச்சுடர்) போலவும் எங்கும் நிறைந்த பரிபூரண நிலையாகிய பிரம்மாகார மாவதல்லவா சமாதிநிலை யென்று கூறப்படுவது? இம்மனமோ ஊஞ்சலைப்போல் சதா அசைந்துகொண்டே

யிருக்கும் சுபாவமுடையது. ஒரு விநாடிக்குள் பல உலகங்களாகத் தோன்றும். இத்தகைய மனம் எவ்வாறு பிரம்மாகாரமாகிய சமாதி நிலையில் அசைவற்று நிற்கும்? அதை யருள்புரியப் பிரார்த்திக்கிறேன்" என்றான்.

"அலையிலாத சாகரம்போல் அனிலம்சேரா விளக்கதுபோல்
நிலையொன்றியாகற் சமாதியுற்று நின்றாட்கமலத் தெழும்புரச
நிறைவாரிதியிற் புகுந்தடியேன் நேசித்ததனி லிருப்பேனோ
* * * * * "

என்று சிதம்பர சுவாமிகள் திருப்போரூர் சந்நிதிமுறையில் கூறி யருளினார்.

ஆசான்:—மனம், சத்துவம், இராஜசு, தமசு என மூக்குணங்களையுடையது. இவற்றில் ஒரு குணம் மேலோங்கின் மற்றை யிரண்டும் கீழடங்கி நிற்கும். ஆகவே எப்போதும் மூன்றில் ஒரு குணமே விவகாரத்திலிருக்கும். அம்மூன்று குணங்களில சத்துவ குணம் மேலோங்கி யிருக்கும்போது ஞானம், ஈசுரபக்தி, கருணை, சாந்தம் முதலிய சன்மார்க்ககுணங்களுண்டாகும். இராஜோ குணம், மேலோங்கியிருக்கின் உலக சம்பந்தமான விஷயங்கள், தேக சம்பந்தமான விவகாரங்கள், சாத்திரவாசனை யிவைகளில் விருப்பத்தை யுண்டாக்கும் குணம், இவை உண்டாகும். தமோகுணம் மேலோங்கி நிற்கும்போது அகங்காரம், கோபம், டம்பம், சோம்பல், நித்திரை, காமக்குரோதாதிகள் முதலிய குணங்களுண்டாகும்.

[இந்த மூன்று குணங்களில் தமோகுணம் யாவரும் நீக்கவேண்டிய குணமேயென்று நன்கு புலப்படும். இராஜோகுண சம்பந்தமாகிய உலக வாசனை, தேகவாசனை, சாத்திரவாசனை ஆகிய இம்மூன்றுங்கூட ஞானாப்பியாசியால் விடத் தக்கவைகளேயாகும். இவற்றில்,

(1) உலக வாசனை என்பது உலகத்தில் யாவரும் நம்மைப் புகழும் படிக்கும், துதிக்கும்படிக்கும் நடந்துகொள்ள வேண்டுமென்று விரும்புவது. அவ்வாறு எல்லோரும் பிரியப்படும்படி நடந்துகொள்வது ஆகாத காரியம். மகா பதிவிரதா சிரோன்மணியாகிய சீதாபிராட்டியின் மேலேயே அவதூறு கூறியது இவ்வுலகம். ஆதலின் "தத்தமது மனதிற்குத் தோன்றியவாறாகவும், உண்மையை யுணராது மேல் விஷயத்தைமட்டும் நோக்கியும் நிந்தையோ, துதியோ, இகழ்ச்சியோ, புகழ்ச்சியோ செய்யும் மனிதருடைய சொல்லால நமக் காகவேண்டிய தொன்றுமில்லை. ஆன்ம லாபத்தைப் பெறும் வழியில் நாம் நடக்கவேண்டும்" என்ற நாட்டங்கொண்டு அவ்வுலக வாசனையை யொழித்து விடவேண்டும்.

(2) தேகவாசனை என்பது காயகற்பாதிகளால் தேகத்தைக் நெடுங் காலம் அழியாமல் வைத்துக்கொண் டிருக்கவேண்டும், அதைச் சுத்தி செய்து ஆடையாபரணம் கந்த புஷ்பாதிகளால் அலங்கரித்து வைக்க வேண்டும் என்று இச்சித்தல். "எத்தனை நாட்களிருந்தாலும் இத்தேகம் அழியும்; மேலே எவ்வளவு அலங்கரித்தாலும் உள்ளே மலம் நிறைந்த பாண்டமேயாகும் இத்தேகம். இதில் இருக்குமட்டும் நாம் துன்பத்தை யனுபவிக்க வேண்டியதே" என்று கருதி ஞானாப்பியாசி தேகத்தை வெறுத்து அதை அன்னியமாகக் கண்டு மறக்கவே முயலவேண்டும்.

(3) சாத்திராபிமானம் என்பது உலகிலுள்ள எல்லாச் சாத்திரங்களை யும் கற்று நாம் எல்லாவற்றிலும் பண்டிதனாக வேண்டும் என்று விரும்பு தல். "இது ஒருபோதும் கைகூடாத காரியம். மேலும், தீராத அவாவை யுண்டாக்குவதால் இது ஞானத்திற்கு விரோதி" என்று உணர்ந்து, எதை யறிந்தால் எல்லாவற்றையு மறிந்ததாகுமோ அந்த சிற்சொரூபத்தை யறி யவே ஞானப்பியாசி முயலவேண்டும்.

மனதின் சத்துவகுணம் உத்தமகுணம்—இராஜோகுணம் மத்திம குணம்—தமோகுணம் அதமகுணம்—என்று கூறப்பட்டிருக்கிறது. சத்து வம் வெள்ளைநிறமும், இராஜசு சிவந்தநிறமும், தமசு கறுப்புநிறமும் போன் றன. அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம், உள்ளம் என்ற ஐந்தில், உள்ளம் என்பதே சத்துவம்; மனம், புத்தி, சித்தம் இவை மூன்றும் இராஜசு, அகங்காரம் தமசு. இச்சத்துவம் மனதின் அருவபாகம்; மற்றைய உருவபாகம். ஆகவே அருவமனம், உருவமனம் என மனதில் இரண்டு பாகங்களுண்டு. இவற்றைப் பற்றிப் பின்னர் நூலிலேயே விவ கரிக்கப்படும். ஆண்டுக் கண்டுகொள்க.] (தொடரும்)

சீடன்.

---

## சர்வவியாபி

புதுவையினின்றும் 1920ஞ அக்டோபர்மீ 27உல் வெளிவந்த "சர்வவியாபி" என்ற பத்திரிகையில், கீழ்க்கண்ட விஷயம் வரையப்பட்டி ருந்ததைக் கண்ணுற்றோம்:—

### "ஆனந்தபோதினி"யின் அசட்டுச்செயல்

1. ஆனந்தபோதினி யென்பது இற்றைக்கு நாலைந்து வருடங்களாக இப்பிராந்தியங்களில் நிலவிவரும் ஓர் மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை. இது சென்னை சௌகார்பேட்டை வெங்கட மேஸ்திரி வீதி, 6-ம் நெ. கட்டி டத்தில், நா. முனிசாமி முதலியாரை ஆசிரியராகக் கொண்டு வெளிவரு கின்றது. இவ்வாசிரியர் மதத்தில் இந்துவாதலால் தம்மதம் அவருக்கு அநேகமாய்த் தெரியக் கூடுமேயொழிய எம்மதமும் அதிலும் கிறிஸ்து வேதத்தைப்பற்றி அவர் இலவலேசமும் அறியாதவரென்றே சொல்ல வேண்டியிருக்கின்றது. ஏனெனில், இவரது பத்திரிகையில் கிறிஸ்துவேத வுண்மைக்கு விரோதமான விஷயங்கள் அடிக்கடி பிரஸ்தாபிக்கப் பெறுவ தாகப் புலப்படுகிறது. 'ஆனந்தபோதினி' சமஸ்த ஜனங்களுக்கும் ஆனந் தத்தை அள்ளியிறைக்கவேண்டுமே தவிர ஒருவருக்கு ஆனந்தத்தையும் மற்றவருக்கு ஆகுலத்தையும் தந்துகொண்டிருத்தல் தர்மமாகாது.

2. ஆனந்தபோதினியில் கிறிஸ்துவேத உண்மைக்கு விரோதமான விஷயங்கள் அடிக்கடி பிரஸ்தாபிக்கப் படுவதாகச் சொன்னோம். இதற்கு தாரணமாக அதன் மலர் 6 இதழ் 3-ல் "பொய்" என்னும் மகுடத்தின் கீழ் K. R. P. விஸ்வநாதன் என்பாரின் கைச்சாத்தோடு வந்த வியாசத் தைப் பாருங்கள். இதில் "ஆ! எத்தனை கிறிஸ்துவர்களை" யெனத் தொட ங்கி "மமதை யடைகிறாய்" என்று முடிகின்ற கட்டத்தில் எத்தனை ஆபா

சம் எத்தனை அசங்கிய பதங்கள் அடங்கிக் கிடக்கின்றன. கிறிஸ்துவேத உண்மைகளைப்பற்றி இந்த விஸ்வநாதனுக்கென்கிலும் என்ன தெரியும்? "நம் இருபத்தோராவது பாட்டன் முதல் எல்லோரையும் எழுப்பு" என உளறிக்கொண்டு போகும் வாக்கியம் பகடியா, பரிகாசமா, படாடோபமா தெரியவில்லை. நகரின் ஒரு கோணமுதல் மறுகோணம் வரைக்கும் கிறிஸ்துவம் ததும்பிநிற்கும் திருச்சிராப்பள்ளியி லிருந்துகொண்டு விஸவநாதன் இத்தகைய விபரீதங்களை விஸ்தரிக்கப் புகுந்தது விநோதமாகவே யிருக்கின்றது. விஸ்வநாதன் விஸ்வநாதனுயிருந்து தீரவேண்டுமேயொழிய விஸ்வநாதன் விஷமநாதனுக இருக்கவேண்டா மென்பதே எமது அபிலாஷை. இனி,

3. ஆனந்தபோதினி ஆசிரியருக்கு ஓர் வார்த்தை. ஆனந்தபோதினி கடைசிவரை ஓர் ஆனந்தபோதினியாகவே நின்று நிலவவேண்டுமென விரும்பின் தாமொரு இந்துவாயிருந்தாலும் கிறிஸ்துமத தூஷணையான அசட்டுச் செயல்களுக்குக் கிஞ்சித்தும் இனிமேல் தமது பத்திரிகையில் இடங்கொடுக்கக் கூடாதெனு ஆசிரியரவர்களை வெகு வணக்கமாகக் கேட்டுக்கொள்கிறோம்.

M. P. MASCARINHAS,
Tuticorin.

13—10—'20.

ஆனந்தனின் அன்பார்ந்த சந்தாநேயர்கட்கும், ஏனையோருக்கும் இது விஷயமாக நாம் கூறுவதாவது:—

மதத்துவேஷங்காரணமாக எழுதப்பட்ட இவ்விஷயத்தைப் பொருட்படுத்தி, நாம் இதைப்பற்றி வரையவே மாட்டோம். ஆயினும் ஆனந்தன் மேல் குற்றம்கூற (அசடு=குற்றம், கீழ்மை) நியாய மிருகசிறதாவென்பதை யறிவிக்கவும், இத்தகைய விஷயங்களை யினிக் கவனிக்கமாட்டோம் என்பதை யிதன் மூலமாகத் தெரிவிக்கவுமே இப்போது சுருக்கமாக இதைப்பற்றிக் கூறத் துணிந்தோம்.

ஆனந்தனில் கிறிஸ்துவேத உண்மைக்கு விரோதமான விஷயங்கள் பிரஸ்தாபிக்கப் படுவதாலேயே, அதன் ஆசிரியர்க்கு வேறு எம்மதமும், அதிலும் கிறிஸ்து வேதத்தைப்பற்றி, இலவலேசமும் தெரியாதென்று அவ்விஷயத்தை வரைந்தோர் தீர்மானித்து விட்டார். இதனுனே அதை வரைந்தோரது ஊகத்தின் அறிவு விசாலம் எம்மட்டென்பது நன்கு விளங்குகிறது. இதோடு, ஒரு மதத்தின் கொள்கைகளும் சித்தாந்தங்களும், மற்றொரு மதத்தின் கொள்கைகளுக்கும் சித்தாந்தங்களுக்கும் ஒத்ததாகவே இருக்கும் என்று கருதும் இவருடைய மத வாராய்ச்சி சாலவியப்புடைத்தே.

இனி யிவர் கூறும் குற்றத்தைச் சற்று கவனிப்பாம். புரட்டாசிமாதம் வெளிவந்த ஆனந்தனில் (86-வது பக்கத்தில்) பொய் என்று ஒரு வியாசம் வரையப்பட்டுள்ளது நண்பர்கள் அறிந்த விஷயமே. அதன் 14-வது பத்தி, "ஆ! எத்தனை கிறிஸ்தவர்களை" என்று தொடங்கி "உனக்கு நிகர் ஒருவருமில்லை யென்று மமதை யடைகிறாய்" என்று முடிகிறது.

ஆனந்தன்மேல் அசட்டுக் குற்றம் சாட்டும் இந்த நண்பர் "அப்பத்தியில் எத்தனையோ ஆபாசங்களும் அசங்கிய பதங்களும் அடங்கிக் கிடக்கின்றன" என்றும், "கிறிஸ்துவேத உண்மையைப்பற்றி இந்த விஸ்வநாதனுக் கென்கிலும் என்ன தெரியும்" என்றும் கூறுகிறார்.

அந்தோ! ஒரு விஷயத்தை வாசித்தால் அதன் உண்மைப் பொருளையும் எழுதியோர் கருத்தையும் உள்ளபடி யறியவொட்டாது இவரை மயக்கி விட்டது ஆத்திரம் என்ற அசட்டுப் பேய்போலும். அப்பத்தியில் நண்பர் விஸ்வநாதன் பொய் என்று கூறியபாகம், "என்று அவர்கள் கூறுவது போதாமல்" என்ற பதங்களுக்குப் பின்னுள்ள "இம்மதத்தில் சேர்ந்தால் ......நீ சீமானுவாய் என்று பொய் யாசைகளைக்காட்டி வாய்ப்பறை யடிக்கச்செய்து" என்ற பாகமே.

அன்னிய மதஸ்தர்களைத் தம் மதத்தில் வந்து சேரும்படி போதிக்கும் கிறிஸ்தவ மதபோதகர்களில் பலர் அம்மாதிரி ஆசை வார்த்தைகளைக் கூறுவது உண்மையே யென்ற விஷயம் யாவருமறிந்ததே. "இதோ பாருங்கள்! உங்கள் மதத்தினர் உங்களைக் கோயிலின் உட்பக்கம் வரக்கூடாதென்று நீக்கி வைக்கிறார்கள். உங்களைச் சமபந்தியில் வைத்துப் புசிப்பதில்லை. எங்கள் மதத்தில் சேர்ந்தால் உங்களை யொரு வித்தியாசமு மில்லாமல் நடத்துவோம்" என்று தெளிவாய்க் கூறுகிறார்கள். ஆனால் சேர்ந்த பிறகோ, அவ்வாறு நடத்துவதேயில்லை யென்பது உண்மை. மேல்நாட்டுப் பாதிரியார் இந்திய கிறிஸ்தவரைத் தம்மோடு சமமாய் வைத்துக்கொண்டு போஜனம் செய்வது எங்கேனுமுண்டோ? ஐரோப்பியர் செல்லும் கோயில்களில் இந்திய கிறிஸ்தவர்கள் வந்து தொழ இடமளிக்கப்படுமோ? இந்த உண்மை விஷயங்கள் மாஸ்கரின்ஹாஸ் என்பவருக்கு ஆபாசமும், அசங்கியமுமான பதங்களாகத் தோன்றுவது ஒரு விஷயத்தில் இயல்பேயாகும். "உள்ளதைக் கூறின் நொள்ளைக்கண்ணனுக்கு நோப்பாளமே" என்பது பழமொழியல்லவா!

நமது விஸ்வநாதன் என்ற நண்பர் அந்த வியாசத்தை எழுதியது பொய்யின் வியாபகத்தை விளக்கிக் காட்டவே யன்றி, ஒருவரையேனும் தூஷிக்கவெண்ணியதல்லவென்பது அறிவாளிக ளனைவர்க்கும் தெற்றெனவிளங்கும். உலகில், அதிலும் இக்கலியாப்தத்தில் எங்கும் பொய்யே விசேடமாகப் பரவி யிருக்கிறதென்பது ஒருவரும் மறுக்கொணு விஷயம். நமது விஸ்வநாதர் கிறிஸ்தவர்களைப்பற்றி மட்டும் கூறவில்லை. வித்துவான்கள், வக்கீல்கள், வர்த்தகர், கைத்தொழிலாளர், அச்சாபீசுகள், வண்டியோட்டுவோர், பிராம்மணர்கள், விளம்பரக்காரர், தரகர், தருமர்போன்ற உத்தமர்கள், முதலிய அனைவரிடமுமே இப்பொய் வியாபித்திருக்கிறது என்று கூறியிருக்கிறார். இது உலக இயல்பு இப்படி யிருக்கிறதென்று கூறவந்ததேயன்றி வேறில்லை.

இவ்வியாசத்தில் குறிக்கப்பட்ட மற்ற அனைவருக்கும் இது குற்றமாகத் தோன்றாதிருக்க, நமது மாஸ்கரின்ஹாஸ்மட்டும் குற்றம் கூறக் கிளம்பியது "எங்களப்பா குதிருக்குள் இல்லை" என்று கூறுவதுபோல் மிக்க வியப்பை யளிக்கின்றது. காமாலைக் கண்ணனுக்கு வெயில் மஞ்சளாகவும், பீனிச வியாதி யுடையோனுக்கு வாசனைத் திரவியம் துர்க்கந்தமா

கவும் தோன்றுவதுபோல், இவருக்கு 'விஸ்வநாதன்' என்ற பெயர்கூட விஷமநாதனுகத் தோன்றுகிறதாக்கும். இவர் தமது வியாசத்தின் இறுதியில் நமக்குக் கூறும் விஷயம் அனுவசியமானதே. ஏனெனில், நாம் கிறிஸ்துமதத்தைப்பற்றி தூஷிக்கிறேமென்பது இவருடைய முழுதும் தவருன அபிப்பிராயமேயன்றி உண்மையல்ல.

உண்மையை ஆராயாது, சர்வவியாபி தன் பெயருக்குத் தக்கபடி தவருன விவகாரத்திலும் வியாபிக்கத் துணிந்து, இந்த வியாசத்தை மதத் துவேஷங் கருதித் தம் அங்கத்தில் ஏற்றுக்கொண்டதைப்பற்றி விசனிக்கிறேம்.

நண்பர்களனைவரும் இதன் உண்மையை யுணர்வார்களென்ற பூரண நம்பிக்கையோடு இதை இம்மட்டோடு நிறுத்துகிறேம்.

ஓம் தத்ஸத்.

பத்திரிகாசிரியர்.

---

## கடவுளை நம்பினோர் கைவிடப்படார்.

எவனொருவன் எல்லாம் வல்ல இறைவனும், ஏகநாயகனும், கருணாநிதியுமான பரமாத்மாவினிடத்தில் உண்மையான பக்திவைக்கின்றுனே அவனுக்கு அப்பகவான் எவ்விதக்குறையையும் வைக்காமல் அவன் கோரிக்கைகளையும் ஈடேற்றி வைக்கிறார் என்பதை அடியிற் கண்ட உண்மைச் சரித்திரம் காதலாமலகம்போல் தெரிவிக்கிறது.

சுமட்ரு தீவில் பாலெம்பாங் என்னும் துறைமுகப் பட்டணத்தில் இரண்டு வருஷங்களுக்குமுன் ஓர் மலாய்க்காரரும் அவருடைய பத்தினியும் வசித்துவந்தார்கள். இவர்கள் மிகவும் பரம ஏழைகளா யிருந்தாலும் தெய்வபக்தியிற் சிறிதும் குறைந்தவர்களல்ல. வறுமையின் கொடுமையால் அதிக கஷ்டத்துடன் ஜீவனம் செய்துவந்தார்கள். ஹிந்துக்களுக்கு காசியாத்திரை எவ்வளவு விசேஷமோ அதேமாதிரி இவர்களுக்கு மெக்கா ஸ்தலயாத்திரை மிகவும் அவசியம். தம்பதிகளிருவரும் தங்கள் ஜீவியகாலத்திற்குள் ஓர் முறையாவது அவ்விடம் போய்வராவிட்டால் தாங்கள் இவ்வுலகில் மானிட உடலெடுத்ததின் பிரயோசனம் ஒன்றுமில்லை என்று கருதி, தங்கள் எண்ணத்தை எவ்விதத்திலாவது முற்றுப் பெறச் செய்யவேண்டுமென்று இரவும் பகலும் இடைவிடாது இறைவனைத் தொழுது வந்தார்கள். இம்மாதிரி சிலகாலம் சென்றபின் ஓர்நா ளிரவு அம் மலாய்க்காரரின் கனவில் ஓர் பெரியவர் தோன்றி "உனக்கு அடுத்த வருஷம் ஒரு ஆண் குழந்தை பிறக்கும்; அக்குழந்தையால் உன் கோரிக்கை நிறைவேறும்" என்று சொல்லி மறைந்தார். பெரியார் அருளிய பிரகாரமே மலாய்க்காரரின் மனைவி மறுவருஷம் ஓர் ஆண்மகவை யீன்றுள். இக்குழந்தை இரண்டு சாணுக்கதிக நீளமில்லை. பிறந்து இரண்டு தினங்க ளாவதற்குள்ளாகவே எழுந்து உட்காரவும், மழலைச்சொற்களைக் கழறவும் ஆரம்பித்தது. மறுதினம் எழுந்து நடக்கவும் தலைப்பட்டது. இந்தப் பேரதிசயத்தைக் காண திரள் திரளான ஜனங்கள் வந்து கூடினூர்கள். வேடிக்கை பார்க்க

வரும் ஜனங்க ளொவ்வொருவரும் தங்கள் தங்களாலியன்ற பொருளு தவியை அவ்வேழை மனிதனுக்குச் செய்யத் தவறுவதில்லை. இம்மாதிரி ஒருவருஷம் சென்றது. குழந்தைபிறந்தபொழு திருந்த வளர்ச்சியை விட ஓரங்குலங்கூட அதிகம் வளரவில்லை. புருடன் மனைவி இருவரும் தாங்கள் கோரிய இடம் போய்த்திரும்புவதற்குப் போதிய பணமும் சேர்ந்துவிட்டது. இக்குழந்தை ஒருநாள் காலையில் எவ்வித வியாதியாலும் பீடிக்கப் படாமலிருக்கையிலேயே திடீரென்று இம்மண்ணுலகை நீத்து விண்ணுல கடைந்தது. பெற்றோர்களடைந்த விசனத்திற் கோரளவில்லை. அதற்குச் செய்யவேண்டிய கருமங்களைச் செய்து முடித்த அதே இரவில் மலாய்க் காரரின் கனவில் முன்தோன்றிய பெரியவர் வந்து, "இனி நீ அக்குழந் தைக்காக விசனப்படுவதை யொழித்து நீ கொண்ட கோரிக்கையை உன் பத்தினி சகிதம் நிறைவேற்று" என்று சொல்லிமறைந்தார். கண் விழித்த தும், பரம கிருபா நிதியின் பெருமையைக் கொண்டாடி, தானும் தன் மனைவியும் மறுநாளே தங்கள் பிரயாணத்தை ஆரம்பித்தார்கள். கடவு ளிருப்பைச் சந்தேகிப்பவர்கள் என்றும் மீளாநரகிற்காளாவர்கள்.

நா. மதுரைமுத்துப்பிள்ளை.
74, அம்பாங்ஸ்திரீட், குவாலாலம்பூர்.

---

## இல்லறம்—கிரகணகாலபலன்

(186-ம் பக்கத்தொடர்ச்சி)

விக்கிரகாராதனையைப்பற்றி எழுதுவதாக முன் சஞ்சிகையில் கூறினோம். இனிக் கிரகண விஷயத்தில் சிறிது கூறி முடிக்கவேண்டி யிருப்ப தால் அதனைப் பூர்த்தி செய்துவிட்டுப் பிறகு மேல்விஷயத்தை யெடுப் போம். இதுவரையிலும் பிரத்தியட்சாதி வகைகளால் கூறினோம். அது இதிகாச புராணாதிகளுக்கு மாறுபடும் என்று சிலர் கூறுவதற்கிடமுண் டாதலால் அவ்விஷயத்திற் சிறிது ஆராய்வோம். சூரிய சந்திரர்களைப் பாம்புகள் விழுங்குகின்றனவென்று இதிகாச புராணங்கள் கூறுகின்றன. அமிர்தங் கடைந்தகாலத்தில் மஹா விஷ்ணுவானவர் அசுரர்களை யேமாற் றிவிட்டுத் தேவர்களுக்கு அமிர்தத்தைப் பகிர்ந்தளிக்கும்போது சகோதரர் களாகிய இரண்டு அசுரர்கள் தேவரூபங்கொண்டு தேவர்களுக்கு மத்தி யில் உட்கார்ந்துகொண்டு அமிர்தத்தைப் புசிக்கும்போது சந்திர சூரியர் கள் ஜாடைகாட்ட, விஷ்ணு மூர்த்தி கைச்சட்டுவத்தால் அவர்கள் மண் டையிலடித்து அவர்களுடைய உருவைக் குலைத்தாரென்றும், அதன் பிறகு அவர்கள் பாம்பின் வடிவமாக இருந்துகொண்டு சூரிய சந்திரர்களைப் பீடிக் கின்றார்களென்றும், அவர்களுக்குத் திருமால் கிரகாதிகாரம் கொடுத்தரு ளினாரென்றும் உண்மை நூல்கள் கூறுகின்றன. அதனோடு மாறுபடுத லால் இதனை யெவ்வாறு கொள்ளலாமெனின் அது கூறுதும்.

"இந்துவிற் பானுவி லிராகுவைக் கண்டாங்குச்
சிந்தையிற் காணிற் சிவன் கண்ணு—முந்தவே
காட்டத்தொறீ யென்னக் கனல்சே ரிரும்பென்ன
வாட்டாறு மோதஞ் செழுத்து"

என்று சிவஞான போதத்தில் மெய்கண்டார் கூறியருளினார்.

இதற்குரையாசிரியர் பாண்டிப்பெருமாள், "இந்துவிற் பானுவிலிராகு வைக கண்டாங்கு" என்பதற்குக் "கண்ணுக்குக் கரிதாகிய இராகு கேதுக்களைச் சந்திரனிடத்தும் ஆதித்தனிடத்துங் கண்டாற்போல" என்று உரை கூறினர். இதனால் இராகு கேதுக்குச் சுபாவத்தில் ஒரு சொரூபங் கிடையாதெனவும், கிரகண காலத்தில் சந்திர சூரியர்களிடத்திற் காணலாமெனவும் பெறப்பட்டது. சந்திர சூரியர்களிடத்தில் காணப்படுவது யாதெனவாராயின் ஒரு பொருளினிழலே யென நன்கு புலப்படும். சிவ ஞானமுனிவர், "இராகுவை இந்துவில் கண்டாங்கு" என்றதற்கு "அந்தரத்தியங்கு நவக் கோள்களுள், ஏனையபோலக் காணப்படாத இராகு கேதுக்களை உபராகத்திற் சந்திராதித்தர் மாட்டுக் கண்டாற்போல" என்றுரைத்து, கேது சாயா கிரகமாகலின் வேறு கூறாதாயினர்" என்று விசேடவுரையுங் கூறினர். இதனால் சாயாக் கிரகமாகிய இராகுவைக் கூறவே, "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்ற உபலட்சண விதியால் மற்றொரு சாயா கிரகமாகிய கேதுவையுங் கொள்ளவைத்தா ரென்பது விளக்கினராயிற்று. ஆகவே இராகு கேதுக்களிருவரும் சாயாக் கிரகங்களே யென்பது விளங்கிக் கிடந்தது.

அங்ஙனமாயினும் புராணங் கூறியதற்கு யாதுகதி யெனின், அஃதுண்மையே. நிழல் வடிவாகிய இராகு கேது மண்டலங்கட்கொரு சக்தியுண்டென முன்னாக் கூறினோம். அச்சக்தியே யதற்கு அதிதெய்வமா மென்றும் கூறினோம். திருமாலாலடியுண்ட இராகு கேதுக்கள் சிறிது அமிர்த மருந்திய மகிமையால சாகவில்லை. சாவுண்டாகாமற் சீவித்திருந்தால் அவர்களும் அமரர்களாய்த் தேவஜாதி யாவார். அசுரர் தேவராவது கூடாமையாலும் அவர்களுக்கு மரணமின்மையாலும் அவர்களுக்கு ஒரு கதி வேண்டும். ஆதலால் அவர்களையும் அரூபியாக்கி மேற்குறித்த நிழல்களுக்கு அதிதேவதையாக்கி அங்கேயே வசிக்கும்படி நியமித்தருளினர். அரூபியாக வெயிலொடு கலந்து நிற்கும் முனிவர்களைப்போலவென்க. "விண்செலன் மரபினையர்க் கேந்திய தொருகை" என்ற திருமுருகாற்றுப்படை வசனத்தாலும், "ஒருகை யெக்காலத்து மாகாயத்தே யியங்குகின்ற முறைமையினையுடைய தேவ விருடிகளுக்குப் பாதுகாவலாக வெடுத்தது" என்றும், "ஞாயிறின் வெம்மையைப் பல்லுயிரும்பொறுத்தலாற்றாவென்று கருதித் தமதருளினாற் சுடரொடு திரிந்தவ்வெம்மையைப் பொறுக்கின்ற முனிவரைப் பிள்ளையார் காக்கவே யுலகத்தைத் தாங்கிக் காத்தாராயிற்று" என்னும் உரையாலு முணர்க. அரூபியாகிய நிழல் மண்டலத்தொடு வேற்றுமையின்றிக் கலந்து வசித்து நிற்றலால் அபேதம் பற்றி யந்நிழலையே இராகு கேதுக்களென்று உண்மை நூல்கள் கூறுகின்றன வென்க. அதனாலேதான் "இந்துவிற் பானுவி லிராகுவைக் கண்டாங்கு" என்று திருட்டாந்தங் கூறப்பட்டதென்க. மந்திர சாஸ்திரங்களில் இராகு கேதுக்களை யுபாசிப்பதற்காக ஏற்பட்டுள்ள மாலா மந்திரம் தியானம் முதலியவற்றிற் சிறிது விளங்கும். காவியக்கர்த்தர்கள் தங்கள் கற்பனைக்கு வேண்டியவாறே கூறுவாராதலால் அவை பிரமாணமாகா வென்க. கற்பனை யென்பது வித்வான்களுடைய புத்தி கோசத்தை விளக்கும் ஒருவித ஊகமே யென்றும், அதனை யெம்மட்டிற் கொள்ளவேண்டுமோ அம்மட்டே கொள்ளப்படுமென்பதும் ஆன்றோர் கருத்து. நிழலும் இராகு கேதுக்களும் ஒன்

ருகவே யிருத்தலால் எவ்வகையான ஆக்ஷேபனைகளுக்கு மிடமாகாது. இதிகாச புராணங்கள் கூறியதும் பழுதுபடாதென்க. விரிக்கிற் பெருகு மாதலால் இவ்விஷயத்தை யித்துடனிறுத்தி, இனி, முன் பிரதிக்ஞை யிட்ட விக்கிரகாராதனையைச் சிறிது ஆராய்வோம்.

விக்கிரகாராதனை.

"மக்கண் மானிட ரென்று மனத்தினன்
மிக்க மேன்மை விளங்கின ரின்னெறனிற்
பொக்க மேவும் பொறிகளோ ரைந்திரு
லொக்கி மாவினை யொத்துயர் வெய்திடார்."

இதனால் மனிதர்கள் மனவறி வொன்று அதிகமாக வுடையராதலால் மிகவுஞ் சிறந்து விளங்குகின்றார்கள். அவ்வறி வொன்றில்லாவிடில், பஞ் சேந்திரிய வறிவினால் தமக்குச் சமானமாக விருக்கும் மிருகங்களுக்கு ஒப் பாய்ப் பெருமை பெறார் என்று புலப்படுதலால் மனிதர்களுக்கு மனமே சிறந்த அறிகருவியாகக் கொள்ளப்படும். அதனாலேதான் மனதுக்கு இந் திரிய ராஜன் என்று ஒரு பேர் கூறப்படும் ('இந்திரியங் களுக்கிராஜ னிதய மாம்...கைவல்யம்)' இந்த மனம் வசப்படுமானால் அதனால் சாதிக்கப் படாத காரியமொன்றுமில்லை. எவ்விதமான இரகசியங்களையுந் தெரிந்து கொள்ளலாம். காணப்படாதவைகளையும் ஊகத்தினு லறிந்துகொள்ள லாம்; திவ்விய சரீரம் பெற்றுத் தேவர்களாகவும் வாழலாம். தேவர்களையும் ஏவல் கொள்ளலாம். பிரபஞ்சத்தோடு வேறறக் கலந்து நிற்கும் பரம் பொருளையும் பிரித்துக் கண்டு தரிசிக்கலாம். சரீரத்துக்குள் மறைந்துநின்று அச்சரீரத்தை நடத்தும் ஆன்மாவையும் கண்டுகொள்ளலாம். இதுபற்றியே "நல்ல செய்து நரரை யுயர்த்தவும், அல்ல செய்தங் களற்றிடை யாழ்த்த வும்,வல்ல திந்த மனபலதையனே,யில்லை யென்ன மறைகளிசைக்குமால்" என்று பெரியோருங் கூறியுள்ளார். ஆதலால் நன்மையைச்செய்து மேன் மையைப் பெறவும், தீமையைச்செய்து தாழ்வை யடையவும் மனமே கார ணமாக நிற்கின்றது. இம்மன மநாதி சிருஷ்டியிலிருந்தே ஜீவான்மாவைப் பற்றித் தொடர்ந்து வருகின்றது பாவ புண்ணிய கன்மவசத்தினால் பலவ கையான சரீரங்களை யெடுத்து அநந்தகோடி யண்டங்கள்தோறு மலைந்து வரும் ஜீவான்மாவைப் பிரியாது உடன் செல்லும் மனதுக்குச் சகல வறிவுமுண்டு. எல்லா விஷயங்களையு மறிந்திருக்கின்றது. ஆனுயிம் கன்ம வாசனையால் மறைப்புண்டு மலின மடைந்துள்ளது. அதனை மாற் றுவதற்கே சகல கன்மங்களும் விதிக்கப்பட்டுள்ளன. அக்கன்மங்க ளில் தேவாராதனை யொன்று. தேவாராதனை சகல கன்மசித்திகளை யும் கொடுக்கும். பிறகு காணப்படாத கடவுளையுந் தரிசிப்பிக்கும். ஆத லால் மனமேமனிதனுக்குச் சிறந்த துணையாம்.அதற்கு மேற்பட்ட துணை யொன்றுமேயில்லை. அவ்வளவு சிறந்த துணையான மனமோ எதையும் சீக் கிரத்திற் பற்றிக்கொள்ளக் கூடியது. ஆதலால் அது நன்மை தீமை யென்று கவனியாமல் எதையும் பற்றி உடனே புலன்வழியாக ஆன்மா வைப் புசிக்கச் செய்யும். அறிவே சொரூபமாய் மலவசததால் மயங்கிக் கிடக்கும ஜீவான்மா மனதாற் செலுத்தப்பட்டவற்றை யனுபவித்து, நன் மையா லின்பத்தையும், தீமையால் துன்பத்தையு மெய்தி மகிழ்ந்து வருந் தாநிற்கும். அறிவுள்ள ஆன்மா அத்தகைய சிறந்த துணையான மனதைத்

தீயவழியிற் செல்லாமல் விலக்கி, நல்வழியிற் செலுத்துமானல் அம்மனம் வசப்பட்டுச் சகல நன்மைகளையு மளித்துத் தேகாந்தத்திலோ, ஜன்மாந்தரத்திலோ, சில நூல்களின் உண்மையான அபிப்பிராயப்படி தேகமுள்ள பொழுதேயோ முத்தி யின்பத்தையும் கொடுக்கும். பிரத்தியட்சத்திலும் நல்ல மனமுடையவர்கள் நன்மை பெற்றுக் கீர்த்தியுடைவர்களாய் வாழ்ந்திருப்பதையும், தீயமன முடையவர்கள் துன்பத்துக்காளாய் வருந்துவதையும் காண்கின்றோம். தீமையால் நன்மையையும் நன்மையால் தீமையையும் அடைகின்றதையுங் காண்கின்றோ மென்றால், அது பூர்வ ஜன்ம கன்ம பலமாமென்று கொள்ளத்தக்கது. 'நன்மை விதைத்தால் நன்மை விளையும், தீமை விதைத்தால் தீமை விளையும்' என்னும் இவ்வசனம் மஹா திருடர்கள், கொலைகாரர்கள் வாயாலும் கேட்கப்படுமாதலால் நன்மைக்கு நன்மையும் தீமைக்குத் தீமையுமுண்டாவதே யியற்கையாமென்று கொள்க. இத்துணைச் சிறந்த மனத்தை யடக்கி ஒருவழிப் படுத்துவதற்கே சகல கன்மங்களுமுண்டாயின வென்போர் பெரியோர்.

இதற்காகவே யோகங்கள் எற்பட்டன. யோகங்களும் பலவகைப்படும். அவற்றுள் அஷ்டாங்கமே சிறந்த தென்பர். அது வாசியை யடக்கி மனவியாபாரத்தை யொடுங்கச் செய்வதாம். இது சர்வ சாதாரண மன்று. யோகமும், நிராலம்பம் சாலம்பமென விருவகைப்படும். நிராலம்பமே முத்திக்கு நேரில் ஏதுவாம். அது மன அடக்கத்தாற் சித்திக்கப்படுவது. மன வடக்கமின்றேல் அது சித்தியாது. மனமதை யொடுக்குவதற்கு முதற்காரணம் சாலம்ப யோகமேயாம். அதாவது, ஏதேனுமொரு குறியைப் பாவித்துத் தியானித்து அதன் மூலமாக மனதை வசப்படுத்துவதாம். அதற்கென்றே பக்தியோகம், மந்திரயோக முதலியன ஏற்பட்டன. இவ்விரண்டு மொரு குறியைப் பாவித்துத் தியானிப்பதால் பாவனைக்கடங்காத பரம்பொருளைத் தரிசிக்கு முறைமையாம்.

எதைக் குறிப்பது என்றால் பரப்பிரம்மத்துக்கு வேதத்திற் கூறப்பட்ட சொரூபங்களையே குறிப்பது. பிரம்மத்துக்குச் சொரூபமுண்டோ வென்றால் உண்டு என்க. எவ்வாறு கொள்வது எனில், வேதங்களில் கூறப்பட்ட சொரூபங்களையேயாம். வேதங்களில் பிரம்மத்துக்குச் சொரூபமே யில்லையென்று கூறப்படு மென்பரே, வேறு சொரூபமேது எனில், பிரம்மத்துக்குரிய இயல்பிலக்கணமது. ஆயினும் பக்தானுக்கிரகார்த்தமாக ஆனந்த சொரூபங்களுண்டென்றே வேதங்கள் கூறுகின்றன. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்கிற பஞ்ச பூதங்களும், சூரியன், சந்திரன், ஆன்மா இவைகளும் பரமான்மாவுக்குச் சரீரமென்று வேதங்கள் கூறுகின்றன. இவைகளே அஷ்ட வடிவங்க ளெனப்படும். (தொடரும்.)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## அந்தரக்களவு அல்லது தபால் கொள்ளைக்காரர்கள்

(198-ம் பக்கத்தொடர்ச்சி)

தேவராஜன்:—''நான் நினைக்கிறேன். இப்போது அவன் விவகாரத்தின் ஏதோ புது விஷயம் நமக்குப் புலப்படப் போகிறது என்று நினைக்கிறேன். ஏதோ காரியமில்லாதபடி அவன் உடனே அந்தப் பெண்ணுக்காகச் செல்வதைவிட்டு வேறெங்கும் போகமாட்டான். அந்தப்

பெண் விஷயத்தில் இவன் ஏதோ பெரிய மோசக் கருத்து வைத்திருக்கிறான். அது இவன் பெண் என்பது எனக்குப் பெரிய சந்தேகமே. அந்த சம்பந்தமாய் ஏதோ பெரிய குற்றம் நடந்திருக்கிறது.

ஆனந்த:—அது அவன் புத்திரியல்லவென்று நான் சத்தியம் செய்வேன்.

தேவ:—அது உண்மையே. இதைப்பற்றிய ருசுவுகளைக்கண்டு பிடிக்கும் வரையில் நாம் வெளிவரலாகாது. இவனை நமது பார்வையிலிருந்து ஒரு விஞடிகூட தப்பவிடாமல் கவனித்து வரவேண்டும்.

ஆன:—இப்போதவன் மேலையூருக்கேன் போகிறான்?

தேவ:—அங்கு அவன் கூட்டாளிகள் யாரோ இருக்கவேண்டும். அவர்களோடு கலந்து பேசவே செல்கிறான்.

ஆன:—அப்படியானல் நாம் தொடர்ந்து செல்லவேண்டியதே.

தேவ:—ஆம் தடையின்றி. இவன் இங்கிருப்பதால் நீ மார்க்கபந்து ஹோட்டலுக்கு இப்போது செல்லவேண்டுவது அவசியம். நீ அவன் இறங்குகிற ஸ்டேஷனிலேயே இறங்கிவிடு. பிறகு அவனைத் தொடர்ந்து பார்த்துக்கொள். நான் நேராய் அமலாபூருக்குச் சென்று அங்கிருந்து சத்தியபுரிக்குச் சென்று என் வேலையை முடித்துக்கொண்டு வருகிறேன். பிறகு இருவர் வேலைகளையும் ஒப்பிட்டுப் பார்த்துக்கொள்ளலாம்.

ஆன:—ஆகா! அப்படியே செய்யலாம். ஆனல், தேவராஜா! நான் இந்த வேலைக்காகத் தபால் மெயில் களவு விஷயத்தை யடியோடு கைவிட முடியாது. கடவுள் தயவால் இப்போது இவை இரண்டும் கலந்திருப்பதுபோல் தெரிகின்றன. இவ்வாறே கலந்திருக்கும் வரையில் நான் இரண்டையும் பார்த்துக்கொள்கிறேன்.

தேவ:—ஆகா அவ்வளவு செய்தால் போதும். அப்படி இரண்டிற்கும் சம்பந்தமில்லாமற் போய்விட்டால் வேறு வழியில்லை; பிரிந்தே வேலை செய்யவேண்டும்'' என்றான்.

அச்சமயம் இரயில்வண்டி புறப்பட மணியடிக்கப்பட்டது. இருவரும், வண்டி மெதுவாய் நகரும்போதே அதில் ஏறிக்கொண்டார்கள். அவர்கள் ஏறிய வண்டி இரங்கநாதன் உட்கார்ந்திருக்கும் அதே வண்டியே. ஆனல் அவன் உட்கார்ந்திருக்கும் ஆசனத்திற்கு நாலைந்து ஆசனங்களுக்குப்பின் இவர்கள் உட்கார்ந்தார்கள்.

வண்டி இரங்கநாதன் இறங்கும் ஸ்டேஷனில் வந்து நின்றதும், ஆனந்தலிங் தன் நண்பனிடம் இரகசியமாய் விடைபெற்றுக்கொண்டு இரங்கநாதன் இறங்கியதே தானும் இறங்கி அவன் பின்னல் சென்றான். இரங்கநாதன் ஸ்டேஷனில், பிரயாணிகள் வண்டிக்கு எதிர்பார்த்துக்கொண்டு தங்கியிருக்கும் அறையில்போய் உட்கார்ந்தான். ஆனந்தலிங்கும் அதே யறையின் ஒரு மூலையில் உட்கார்ந்தான். இரங்கநாதன் அவனைச் சற்றுவது கவனித்தவனல்ல. ஏனெனில் அவன் யார் என்பதை இரங்கநாதன் சற்றுவது அறிந்தவனல்ல.

சுமார் அரைமணி நேரங் கழித்து இரங்கநாதன் அறையைவிட்டு வெளிப்பட்டு ஒருவண்டி பேசிகொண்டு புறப்பட்டான்.

ஆனந்தலிங்கோ, ஒரு விநாடிகூடத் தாமதியாமல், இன்னொரு வண்டிக்காரனை யமர்த்திக்கொண்டு,

"இதோபார்! அந்த வண்டியை விடாமல் தொடர்ந்துசெல்ல வேண்டும். அது எங்கே நிற்கிறதோ அந்த விடத்தை விட்டு நீ நேராய் ஓட்டிக்கொண்டு போ. அந்த வண்டிக்காரன் நீ வேண்டுமென்றே பின் தொடர்ந்ததாய்ச் சற்றும் சந்தேகப்படலாகாது. தெரிகிறதா?" என்றான்.

அந்த வண்டிக்காரன் தெரியும் தெரியுமென்று கண் சிமிட்டி விட்டு வண்டியை விட்டான். வண்டி ஸ்டேஷனைக் கடந்ததே ஆனந்தலிங் நாற்புறமும் பார்த்துவிட்டு வண்டியின் சாளரங்களையெல்லாம் மூடிக்கொண்டு உடனே தன்னிடமிருந்த பிரயாணப் பையை யெடுத்து, தான் அணிந்திருக்கும் உடைகளைக் கழற்றிவிட்டு வேறு உடைகளை யணிந்துகொண்டு, தாடி மீசை வைத்துக்கொண்டு தன் உருவை யடியோடு மாற்றிக்கொண்டான்.

இரங்கநாதன் வண்டி அந்த நகரத்தின் பிரதான ஹோட்டலின் எதிரில் நின்றது. ஆனந்தலிங் வண்டிக்காரன் அந்த விடத்தைத் தாண்டித் தெருக்கோடியில் இருக்கும் வேறொரு ஹோட்டலின் எதிரில் நிறுத்தினான். ஆனந்தலிங இறங்கி வீதியை நோக்கிச் சற்றுநேரம் பார்த்துவிட்டுத் துரிதமாய் இறங்கி சாரதிக்குக் கூலியை யளித்தான்.

முரட்டுத்தனமான உடையையும் செம்பட்ட நிறமுடைய தாடி மீசையையும் முரட்டுப் பார்வையையும்கண்ட சாரதி மிக்க வியப்புற்று பிரமித்து,

"ஓ! அய்யா! வண்டிபேசி யேறிக்கொண்ட பெரிய மனிதர் எங்கே இறங்கிவிட்டார்?" என்றான்.

ஆன:—"நீ யென்ன குடித்திருக்கிறாயோ? அப்படிப்பட்ட மனிதன் யாருமில்லை. நான் ஒருவனே வண்டி பேசி ஏறியவன்" என்றான்.

வண்டிக்காரன் "இருக்கலாம்" என்று கூறி ஒன்றுமறியாது பிரமையடைந்து பேசாமல் வண்டியின் கதவைத் திறந்து உள்ளே பார்த்துவிட்டு "கடவுளறிய வண்டிபேசி யேறிய ஆள் வேறு ஆள் என்று சத்தியம் செய்வேன்" என்றான்.

ஆனந்தலிங் நகைத்துக்கொண்டே நமது மாறுவேடம் சரியானதென மனதில் எண்ணிக்கொண்டு அவனை யருகிலழைத்து,

"நீ வீண் கலவரம் வைத்துக்கொள்ளாதே. இதோ பார்" என்று தன் உட்சட்டையிலிருக்கும் பதக்கத்தைக் காட்டி, "பத்திரம் சங்கதி வெளியிட வேண்டாம், இதோ உன் சத்தம்" என்று தாராளமாய்க் கூலி கொடுத்தான்.

வண்டிக்காரன் இவன் துப்பறியும் உத்தியோகஸ்தனென்று தெரிந்து கொண்டு,

"ஆ! தெரிந்துகொண்டேன். நான் சுத்த மூடனாய்விட்டேன். கடவுள் உங்களுக்கு ஜெயத்தையும் செல்வத்தையும் உண்டாக்குவார். என்னிடமிருந்து எள்ளளவு சங்கதிகூட வெளிவராது" என்று கூறிவிட்டு வந்தனமளித்துச் சென்றான். (தொடரும்)

ஆரணி குப்புசாமி முதலியார்.

---

# பொதுசமாசாரங்கள்

**ஓர் முக்கிய அறிவிப்பு:—** சந்தேகங்களை விளக்கும்படி பத்திரிகாசிரியருக்கு வினாக்களை யனுப்புவோர் தபால் பில்லை யனுப்பினாலன்றி விடை யளிக்கப்படமாட்டாது.

பத்திரிகாசிரியர்.

**ஓர் அசையும் விக்கிரகம்.—** பர்மா தேசத்தில் டாராவ் என்ற ஒரு ஊர் உளது. அங்குள்ள கல்சிலை யொன்று தானாக அசைந்து ஆடுவதாகவும், ஜனங்கள் அதை ஆச்சரியமாகப் போய்ப் பார்த்து வருவதாகவும் கூறப்படுகிறது. முன்பு நாம் கற்பாறைக்குள்ளிருந்த மனிதனைப்பற்றி வரைந்துள்ளோம். சுமார் 15 வருடங்களுக்குமுன் கல்கத்தாவில் ஒரு காளிகோயிலிலிருந்த காளியின் கல்விக்கிரகம், (ஒருநாள் மகா பூஜை நடந்தபோது ஆயிரக் கணக்கான ஜனங்களுக்குமுன்) தன் கரத்திலிருந்த கத்தியைச் சுமார் மூன்று நிமிடகாலம் தலைக்குமேல் சுழற்றியதாகவும், அந்த விக்கிரகம் கத்தியோடு சேர்ந்த ஒரே கல்லென்றும், அச்சமயம் அருகிலிருந்து பார்த்த ஒரு ஐரோபிய இன்ஸ்பெக்டர், லார்ஜென்ட் இருவரும் கோயிலதிகாரிகள் அனுமதி பெற்று உடனே அவ்விக்கிரகத்தைச் சோதித்துப் பார்த்து, அதற்குள்ளாவது கீழாவது எவ்வித எந்திரம் முதலிய சூழ்ச்சிகள் ஒன்றும் காணப்படவில்லை யென்றும் இந்த ஆச்சரிய செயலுக்குக் காரணம் தங்களுக்கு விளங்கவில்லை யென்றும் அவர்கள் கையொப்பத்தோடு ஒரு கல்கத்தா ஆங்கில பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டிருந்தது. அதன் மொழி பெயர்ப்பு, அக்காலத்தில் கொழும்பு நகரில் வெளியாகி வந்த "சஞ்சீவகாணி" என்ற வாரப் பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டிருந்தது. இத்தகைய அபூர்வ சம்பவங்கள் நமது தெய்வீக நாட்டில் அப்போதைக்கப்போது நடப்பது சகஜமேயாகும் ஆனால் பிரத்தியக்ஷப் பிரமாணம் ஒன்றையே நம்புவோரும், தமது புத்திக்கு விளங்காத விஷயத்தைப் பொய் என்று கூறும் சுபாவமுடையோரும் இவற்றின் காரணத்தை யுணரார்கள்.

**ஓர் அபூர்வ சிகிச்சை.—** அமெரிக்காவைச் சேர்ந்த நியூயார்க் நகரத்தில், ஒரு டாக்டர் ஊமையனாகிய ஒருவன் மண்டையை மின்சார சக்தியால் துளைத்து அதனுள் மூளையின்மேல் ஒட்டிக்கொண்டிருந்த சிலிட் என்னும் ஒருவித வஸ்துவை வெளியே யெடுத்துப் போட்டுவிட்டுக் காயத்தை ஆற்றியபிறகு, ஊமையன் தாராளமாகப் பேசப் புறப்பட்டானாம். என்ன ஆச்சரியம்!

**பாடுகின்றபாவை:—** அமெரிக்காவைச் சேர்ந்த சான்பிரான்சிஸ்கோ நகரிலுள்ள டாக்டர் நிக்கேரன் என்பவர் பஞ்சணையில் சாய்ந்திருக்கும் பாவனையில் பெண் உருவ மொன்றை அமைத்து அது சித்தார் என்ற சங்கீதக் கருவியை வாசிக்கும்படி செய்திருக்கிறார். இந்த கானப்பாவையானது 64 பாட்டுகள் பாட பழகியிருக்கிறதாம். அந்தப் பாவையின் சரீரமெங்கும் சக்கரங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றனவாம். இதைச் செய்வதற்கு மேற்படி டாக்டர் 12 வருடம் வேலை செய்திருக்கிறார்.

---

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்

## இரௌத்திரி௵ தைமீ—சாலிவாகனம் 1843-கலியுகாதி 5022

## பசலி 1329-30—கோல்லம் 1095-96—ஹிஜரி-1338-39

## இங்கிலீஷ் 1921௵ ஜனவரிமீ—பிப்ரவரிமீ

| தைமீ | ஜனவரிமீ | வாரம் | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | வி | சவு-25-59 | சத-36-விய | ம-55சி | சங்கிராந்தி, அடுப்பிட |
| 2 | 14 | வெ | பஞ்28-30 | பூட்-39-13 | அசி-60 | ஆடை ஆபரணம் பூண |
| 3 | 15 | ச | சஷ்29-57 | உட்-41-49 | சி-41பி | மகரம் நாற்றுநட |
| 4 | 16 | ஞா | சப்-29-41 | ரேவ-42-50 | சித்-60 | சீமந்தம், கெர்ப்பாதானம் |
| 5 | 17 | தி | அ-28-22 | அசு-42-45 | சித்-60 | கெர்ப்பாதானம் |
| 6 | 18 | செ | நவ-26-5 | பர-41-42 | சித்-60 | .... ......... |
| 7 | 19 | பு | தச-26-36 | கிரு*39-35 | அ-39சி | சிங்கம் பிரயாணம் |
| 8 | 20 | வி | ஏ-18-15 | ரோ-36-37 | உத்-மர | ... ........... |
| 9 | 21 | வெ | து-13-15 | மிரு-33-6 | சித்-60 | மேஷம் வியாபாரம் |
| 10 | 22 | ச | திர-8-9 | திரு-29-11 | சித்-60 | கடகம் பிரயாணம் |
| 11 | 23 | ஞா | சது-2-59 ○55-18 | புன-25-2 | சித்-60 | துலாம் கெர்ப்பாதானம் |
| 12 | 24 | தி | பிர-50-51 | பூச-20-52 | சித்-60 | சீமந்தம் |
| 13 | 25 | செ | து-44-52 | ஆயி-16-54 | சித்-60 | தீவாந்திர பிரயாணம் |
| 14 | 26 | பு | தி-39-44 | மக-13-23 | சி-அ60 | விவசாயம் |
| 15 | 27 | வி | சவு-35-26 | பூர-10-30 | சி-10-மர | சித்திரமெழுத |
| 16 | 28 | வெ | பஞ்-32-3 | உத்-8-12 | சி-அ-60 | வாசக்கால் வைக்க |
| 17 | 29 | சனி | சஷ்29-40 | அஸ்-7-4 | மர-60 | கரிநாள் |
| 18 | 30 | ஞா | சப்-29-23 | சித்-8-29 | சித்-60 | வித்தியாரம்பம் |
| 19 | 31 | தி | அ-29-33 | சுவா-9-3 | அ-9-மர | வியாபாரம் |
| 20 | 1921௵ பிப்ரவரிமீ 1 | செ | நவ-29-51 | விசா-10-21 | ம-10-சி | கொடிகள் நட |
| 21 | 2 | பு | தச-32-28 | அனு-13-56 | அசி-60 | பிரயாணம் |
| 22 | 3 | வி | ஏ-36-10 | கேட்-18-33 | பி-18-சி | |
| 23 | 4 | வெ | து-40-52 | மூல-24-48 | அ-24-பி | |
| 24 | 5 | சனி | திர-45-58 | பூரா-29-18 | சித்-60 | |
| 25 | 6 | ஞா | சது51-25 | உரா-37-6 | அ-60 | |
| 26 | 7 | திங் | ●57-47 | திரு-43-45 | அ-43-சி | |
| 27 | 8 | செ | பிர-60-0 | அவி-49-20 | சி-49-ம | |
| 28 | 9 | பு | பிர-1-14 | சத-55-29 | சி-55-அ | |
| 29 | 10 | வி | துவி-4-38 | பூட்-58-24 | சித்-60 | |
| 30 | 11 | வெ | திரு-7-19 | உட்-60-0 | சி-அ-60 | |

| | | | |
|---|---|---|---|
| | கே | | |
| சூரி செவ் | 15-மீன-சு 18கும்-புத | | |
| சூ-பு | 23-மீ-செ 30-சி-வ-ச | | குரு |
| | | ராகு | சனி |

Printed & Published by N. Munisawmi Mudaliar at the "Ananda Bodhini" Press, 15, Venkatesa Maistry Street, Madras.